# கல்கி

KALKI

7.12.8

சபிக்கப்பட்ட சென்னைச் சாலைகள்



## உங்களின் கை பட்டால்
## தனிச்சுவை மின்னுவது போல
## எங்களின் கை பட்டால்
## தரம் அங்கே மின்னும்.

சேலம் ஸ்டீல். எங்களின் ஒவ்வொரு படைப்பும் உலகம் அளவு விஷயத்தை உள்ளடக்கியது. கண்ணால் காணமுடியாத பல இரகசியங்கள் அதிலே மின்னும்-மலரின் மணத்தைப் போல. எனவே நாங்கள் சிறந்ததையே நாடுகிறோம், மூலப்பொருளிலும்- தொழில் நுட்பத்திலும். சின்னச்சின்ன விஷயத்தில் கூட வெகு நுட்பமாக கவனம் செலுத்துகிறோம்; ஒவ்வொரு கட்டத்திலும் மிகவும் நுண்ணிய பரிசோதனைக்கு உட்படுவதால் தரம் அங்கே மின்னுகிறது.

கண்ணுக்குத் தெரியாத பல இரகசியங்கள் எங்களின் ஒவ்வொரு படைப்பிலும் ஒளிந்திருப்பது இப்போது நன்றாகப் புரியும்.

எங்களின் தர கவனம்—உங்களின் படைப்பு போல.



**சேலம் உருக்காலை**
சேலம் 636 013 தமிழ்நாடு
ஸ்டீல் அதாரிட்டி ஆப் இந்தியா லிமிடெட்
ஒரு இந்திய அரசு நிறுவனம்

## சேலம் எவர்சில்வர்.

கேட்டு வாங்குங்கள். எங்களின் தரமே எல்லை! எவரும் இதுவரை தந்ததே இல்லை!

Sista's - SSP.559.86 TM C



கல்கி ஏற்கும் சமுதாயப் பணி

# இவர்களுக்குப் பிறந்தது விடிவு காலம்!

## மறுபடியும் மதுரை மாவட்டம்



# அசுர வேகத்தில் அரசுப் பணிகள்!

சென்ற பிப்ரவரியில், முட்டிக்கால் பெயர நம்மை அகமலை கிராமத்திற்கு அழைத்துச் சென்ற எஸ்டேட் ஓனர் ஜெயச்சந்திரனை, நாம் இந்த ரீ-விசிட்டில் சந்தித்த போது, சந்தோஷ மிகுதியில் ரொம்பவும் உணர்ச்சிவசப்பட்டுப் போனார். ''. சார், முன்பெல்லாம் எங்கள் அகமலைக்கான சாலை வசதிக்காக அரசு அதிகாரிகளைச் சந்தித்தால் அசிரத்தையோடுதான் பதில் சொல்வார்கள். ஆனால் எங்கள் பிரச்னைகள் கல்கியில் வெளியான பிறகு நிலைமையே தலைகீழாகி விட்டது. ' கல்கியில் எழுதியிருக்கிறார்களே, அந்த அகமலைக்குத்தானே சாலை வசதி கேட்கிறீர்கள்? நானும் படித்தேன். உடனடியாகக் கவனிக்கப்பட வேண்டிய விஷயம் தான். பிரச்னையின் தீவிரத்தை இப்போது நாங்கள் முழுமையாக உணர்ந்து கொண்டோம். ஆவன செய்து கொண்டிருக்கிறோம். கவலைப்படாமல் போய் வாருங்கள்' என்று ரொம்பவும் ஆதுரமாகப் பதில் சொல்ல ஆரம்பித்தார்கள்.

அகமலை கிராமத்திற்குச் சாலை வசதி செய்து தருவதென்பது எங்கள் சட்டமன்ற உறுப்பினர் கே. எஸ். இராமச்சந்திரன் (இ. காங்கிரஸ்) அவர்களின் தேர்தல் வாக்குறுதிகளில் ஒன்று என்பதால், கல்கியில் வெளியான பிறகு அவருக்கும் அது சாதகமாகிச் சந்தோஷப்பட வைத்தது. அது விஷயமாக அவரும் நானும் சென்னையிலுள்ள அரசுத்துறை ஆணையர் மற்றும் ஊரக வளர்ச்சித் துறைச் செயலருமான வி. சுந்தரம் (இவர் முன்பு பெரியகுளம் சப்-கலெக்டராக இருந்தவர்) அவர்களைச் சந்தித்த போது, 'நானும் கல்கியில் படித்தேன். இன்னுமா அங்கு சாலை வசதி செய்து தரப்படவில்லை?' என்று ஆச்சரியப்பட்டுப் பூரண ஒத்துழைப்புத் தந்தார்.



• ஸ்ரீ ரெங்காபுரம், கொடுவிலார்பட்டி வழியாக வெங்கடாசலபுரம் செல்லும் இப்பாதையைத் தார் ரோடாக்க, கிராமச் சாலைகள் கண்காணிப்புப் பொறியாளருக்குத் திட்டப் பிரேரணை அனுப்பப் பட்டுள்ளது.

'' இப்படி ஒவ்வோர் இடத்திலும் எங்களுக்குப் பரிபூரண ஒத்துழைப்புக் கிடைத்தது. இப்போது அகமலைச் சாலைக்காக நில மற்றோர் வேலை வாய்ப்பு உறுதித் திட்டத்தின் கீழ் தொண்ணூற்றேழு லட்ச ரூபாய் ஒதுக்கப்பட்டு, சர்வே செய்யும் வேலைகள் ஆரம்பமாகி விட்டன. ஒவ்வோர் அதிகாரியும் பரிவோடும் உற்சாகத்தோடும் வேலை செய்து கொண்டிருக்கிறார் அசுர வேகத்தில் பணிகள் நடக்கின்றன. அத்தனை பெருமையும் கல்கியையே சாரும். நன்றி சார், நன்றி!'' என்றார், ஜெயச்சந்திரன்.

சார், தம்பி ஜெயச்சந்திரன் சொல்வது முழுக்க முழுக்க உண்மைதான் என்றாலும் இன்னும் சில பிரச்னைகள் நீண்டு கொண்டு தான் இருக்கின்றன...'' என்றார், நம்மைச் சந்திப்பதற்காக மலையடிவாரத்திற்கு வந்தி



• அகமலை: இனி நோயாளிகளை இப்படித் தூக்கி வரத் தேவையில்லை.



* இரா. வரதராஜுலு: பாராட்டுப் பெறும் மதுரைக் கலெக்டர்

ருந்த அகமலை பஞ்சாயத்துத் தலைவர் முத்து ராமலிங்க பாண்டியன்.

"சொல்லுங்கள்!" என்றோம்.

"அகமலையிலுள்ள துணை சுகாதார நிலையத்தில் நியமிக்கப்பட்டுள்ள நர்ஸ் இன்னமும் ஒழுங்காக வருவதில்லை. நீங்கள் வந்தபோது எப்படியிருந்ததோ அப்படிப்பட்ட அசுத்தங்களோடுதான் இன்றைக்கும் அந்தச் சுகாதார நிலையம் இருக்கிறது. குடிநீர் வசதிக்கான பைப்புகளும் போடப்படவில்லை. மலை கிராமமாக இருப்பதால் இரவில் அதிக வெளிச்சம் இருப்பது மிகவும் பாதுகாப்பாக இருக்குமென்று, இருபது சோடியம் வேப்பர் விளக்குகளைப் பஞ்சாயத்து நிதியிலிருந்து வாங்கினோம். அதைக் கம்பத்தில் பொருத்துவதற்கு, விளக்கு ஒன்றுக்கு முந்நூற்றைம்பது ரூபாய் கேட்கிறார்கள் மின் வாரியத்தினர். அதனால் அந்த விளக்குகளெல்லாம் கடந்த இரண்டு மாத காலமாக அப்படியே கிடக்கின்றன.

"இவற்றோடு, சொக்கனோ கிராமத்திலிருக்கும் பளியர்கள் என்னும் மலைவாசிகளுக்கு வீடுகளைக் கட்டித்தர அரசு தயாராயிருந்தாலும் முடியவில்லை. காரணம், அவர்களுக்கு வீடு கட்டும் இடத்தை முதலில் ஊர்ப் புறம்போக்கு நிலமாக மாற்ற வேண்டும். அதற்கு அந்நிலத்தை சர்வே செய்ய வேண்டும். அப்படிச் சர்வே செய்ய வந்த சர்வேயர் ஒருவர், தாம் சர்வே செய்ய வேண்டுமானால் ஐந்நூறு ரூபாய் லஞ்சம் வேண்டுமென்று கேட்கிறார். அன்றாடக் கஞ்சிக்கே கஷ்டப்படும் அந்த மலைவாசி மக்கள் ஐந்நூறு ரூபாய்க்கு எங்கே போவார்கள்? எனவே, இதையெல்லாம் எங்கள் மாவட்டக் கலெக்டரிடம் மறுபடியும் முறையிட்டு ஆவன செய்யுங்கள்...!" என்றார், அவர்.

"அவசியம் செய்கிறோம்!" என்று உறுதியளித்துவிட்டு, அவர்களிடமிருந்து விடைபெற்றுக் கொண்டு, ஆண்டிப்பட்டி மருந்தகத்திற்கு விஜயம் செய்தோம். இப்போது பிரிஜ் இருந்தது. டெட்டனஸ் மருந்துகளும் தேவையான அளவுக்கு இருப்பதாகச் சொன்னார்கள். இப்போது, வெறும் மருந்தக அந்தஸ்தில் உள்ள அதை, இருபத்து நான்கு படுக்கைகள் கொண்ட மருத்துவ மனையாக விஸ்தரிக்கும் பணிகளும் விரைவில் மேற்கொள்ளப்பட இருப்பதாகச் சொன்னார்கள். நெஞ்சு நிறைவோடு மதுரைக்கு அருகிலுள்ள திருமங்கலத்திற்குச் சென்றோம்.

அங்கு, கடந்த 1947 இல் தொழிற்பேட்டையாக அறிவிக்கப்பட்டதோர் இடத்தில் இப்போது தொழிற்சாலைகளும் இல்லாமல், வீடுகளைக் கட்டவும் அனுமதி கொடுக்காமல் அலைக்கழிக்கும் பிரச்னை பற்றி விசாரித்தோம்.

"சார், சென்ற முறை நீங்கள் வந்து பார்த்துவிட்டுச்சென்று, கலெக்டரிடம்முறையிட்ட போது, கலெக்டரும் சம்பந்தப்பட்ட அதிகாரிகளிடம் விளக்கம் கேட்டிருந்தார். அந்த அதிகாரிகள் நாங்கள் ஏதும் 'கவனிக்க' வில்லை என்பதால் அவர்கள் கலெக்டரிடம் தவறான விளக்கங்களைக் கொடுத்து விட்டார்கள்.

"நாங்கள் விசாரித்தவரையில் ஓர் இடத்தைத் தொழிற்பேட்டையாக அறிவித்துப் பத்தாண்டுகளுக்கு மேலாகியும் அங்கு தொழிற்சாலைகள் ஏதும் நிறுவப்படாவிட்டால், தொழிற்பேட்டையாக அறிவிக்கப்பட்டது தானாகவே காலாவதியாகிவிடும் என்கிறார்கள். அதோடு முன்பு திருமங்கலம் டவுன் பஞ்சாயத்தாக இருந்தபோது, இந்த இடம் தொழிற்பேட்டையாக வேண்டாம் என்றும் தீர்மானம் போட்டிருக்கிறார்கள். இவற்றோடு, தொழில்கள் தொடங்குவதற்காக ஊருக்கு ஒதுக்குப்புறத்தில் சிப்காட் கட்டியிருக்கும் கட்டடங்களெல்லாம் கடந்த ஐந்தாறு ஆண்டுகளுக்கும்மேலாகஅப்படியே தான் கிடக்கின்றன. யாரும் தொழில்கள் துவங்க முன்வரவில்லை. அப்படியிருக்கும் போது இந்த இடத்தை வீட்டு மனைகளாக அங்கீகரிக்க என்ன தடை இருக்க முடியும்?

"இந்தநிலையிலும்ஒரு வீடுகட்டப்பட்டு விட்டது. இன்னும் இருவர் கட்டிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு மட்டும் எப்படி அனுமதி கிடைத்தது? எங்களுக்கு ஏன் கிடைக்கவில்லை? காரணம், 'நாங்கள் யாருக்கும் லஞ்சம் தரத் தயாராய் இல்லை என்பதுதான். தயவு செய்து இந்த முறையும் கலெக்டரிடம் முறையிடுங்கள். கண்டிப்பாக எங்களுக்கு நீதி கிடைக்கச் செய்வார்!" என்றார்கள் சம்பந்தப்பட்ட மக்கள்.

இது தொடர்பாகத் திருமங்கலம் நகர் மன்றத் தலைவர் மு. சி. சோ. ஆ. அதியமானை (தி. மு. க.)ச் சந்தித்துக் கேட்டபோது,

"நான் தீர்மானம் கொண்டு வரத் தயா

ராய் இருக்கிறேன். ஆனாலும் அப்படியொரு தீர்மானத்தைக் கொண்டு வந்தால், நான் ஏதோ தனிப்பட்ட முறையில் 'சம்திங்' பெற்றுக் கொண்டு விட்டேனே என்று மற்ற வர்களெல்லாம் சந்தேகப்பட ஆரம்பித்து விடுவார்கள். அந்த பயத்தில்தான் நான் பேசாமல் இருக்கிறேன். மாவட்டக் கலெக்டரின் நேரடிப் பார்வையில் பிரச்னை தீர்க்கப் பட்டால், என்னை விடச் சந்தோஷமடை பவர் வேறு யாரும் இருக்க முடியாது சார்!'' என்றார் அவர்.

அவரிடமிருந்து விடைபெற்றுக் கொண்டு, மேலும் சில குறிப்பிட்ட இடங்களை ரீ-விசிட் செய்து பார்த்தோம். மதுரை நகரையும் ஒரு சுற்றுச் சுற்றினோம். கடைசியில், நாம் ஏற்கெனவே, கலெக்டரைச் சந்திக்கத் தேதி கேட்டிருந்ததற்கு ஒருநாள் முன்னதாகவே சந்திக்க விருப்பம் தெரிவித்துப் போன் செய்த போது, சந்தோஷமாக ஒப்புக் கொண்டார் கலெக்டர் இரா. வரதராஜுலு. 'சென்ற முறை நீங்கள் கலெக்டரைச் சந்தித்த போது சம்பந்தப் பட்ட அதிகாரிகளும் உடனிருந்தார்கள்.



* டி. காமக்காபட்டி: விரைவில் வீட்டுமனைப் பட்டாக்கள் வழங்கப்படும்!

அது போலவே இப்போதும் அவர்களை வரவழைக்க வேண்டுமா?' என்று நம்மிடம் கேட்ட கலெக்டரின் உதவியாளர் ராகவனிடம் 'அந்த அளவுக்கு அவசியமில்லையென்றே கருதுகிறோம்' என்று நாம் பதில் சொன்ன போதும், 'எதற்கும் அவர்கள் உடனிருக்கட்டுமே சார்; வரவழைக்கிறேன்' என்று பல அதிகாரிகளையும் வரவழைத்திருந்தார் அவர்.

நாம் கலெக்டர் அறைக்குள் நுழைந்த போது, கலெக்டர் உள்பட ஒவ்வோர் அதிகாரியும் ஃபைல்களோடு சேர்த்து ஒவ்வொரு நோட்டுப் புத்தகத்தையும் கையில் வைத்துக் கொண்டிருந்தார்கள். நம்மிடமும் ஒன்று தந்தார்கள். அதன் மேலட்டையில் 'மதுரை மாவட்டத்தில் கல்கி — எழுப்பப்பட்ட பிரச்னைகளும் எடுக்கப்பட்ட நடவடிக்கைகளும்' என்று தலைப்பிட்டிருந்தது. புரட்டிப் பார்த்த போது, நாம் கடந்த 9.3.86, 16.3.86 தேதியிட்ட இரண்டு கல்கி இதழ்களிலும் எழுதியிருந்த பிரச்னைகளோடு, நாம் நேரடியாகச் சொன்ன பிரச்னைகளையும் சேர்த்து மொத்தம் முப்பத்தெட்டுப் பிரச்னைகளும் வரிசை எண் கொடுக்கப்பட்டு டைப் செய்யப்பட்டிருந்தன. அதன் அருகிலேயே இதுவரை எடுக்கப்பட்ட நடவடிக்கைகள் — எடுக்கப்பட்டுக் கொண்டிருக்கும் நடவடிக்கைகள் — எடுக்கப்படவுள்ள நடவடிக்கைகள் ஆகிய அனைத்தும் டைப் செய்யப்பட்டிருந்தன. ஒவ்வொன்றையும் கலெக்டரே படித்துப் படித்து நமக்கு விளக்கம் சொல்லிக் கொண்டு வந்தார்.

எல்லாம் முடிந்தவுடன், ''இன்னும் ஏதாவது புதிய பிரச்னைகள் இருக்கின்றனவா?'' என்றார் கலெக்டர் இரா. வரதராஜுலு.

அகமலை பஞ்சாயத்துத் தலைவரும் திருமங்கலம் வாசிகளும் நம்மிடம் சொன்னவற்றைச் சொன்னோம். ஒன்று விடாமல் மற்ற அதிகாரிகளைக் குறித்துக் கொள்ளச் சொன்னார். விரைவில் நடவடிக்கை எடுக்கப் படும் என்று உறுதியளித்துவிட்டு மனம் திறந்து பேசினார் கலெக்டர்.

மதுரை — விருதுநகர் தேசிய நெடுஞ்சாலையில் கள்ளிக்குடி என்னுமிடத்தில் அடிக்கடி விபத்துக்கள் நடப்பது பற்றிக் குறிப்பிட்டிருந்தீர்கள். தேசிய நெடுஞ்சாலையில் வேகத் தடை அமைப்பதற்கு அரசு விதிமுறைகளின் படி இயலாது என்பதால், இப்போது எச்சரிக்கைப் பலகைகளும், இரவு நேரங்களில் தெரிவதற்காக எதிரொளிக்கக்கூடிய நாடாக்களும் (Reflective Signs) வைக்கப்பட்டுள்ளன. இப்போதும் நீங்கள், 'மேல் மருவத்தூரில் மட்டும் எப்படி தேசிய நெடுஞ்சாலையில் வேகத்தடை அமைத்திருக்கிறார்கள்? அங்கே மட்டும் விதிமுறைகள் என்னவாயின?' என்று திருப்பிக் கேட்டால் என்னால் பதில் சொல்ல முடியாது. என் நிலைமை அப்படி!

''இப்போதும் ஆட்டோ ரிக்ஷாக்களில் மீட்டர் இல்லையே. அப்படியிருந்தாலும் அதன்படி கட்டணம் வசூலிக்கப் படுவதில்லையே என்று கேட்டால், ஓர் ஆட்டோ டிரைவருக்கும் ஒரு சாதாரண போலீஸ் கான்ஸ்டபிளுக்கும் உள்ள 'உறவை' அத்தனை சுலபத்தில் நம்மால் பிரித்துவிட முடியாது. கொஞ்சம் கொஞ்சமாகத்தான் அதைத் தகர்த்தெறிய முடியும். நானும் மாவட்டக் காவல்துறைக் கண்காணிப்பாளரும் அது தொடர்பாக ஆலோசித்துக் கொண்டிருக்கிறோம். விரைவில் இரயில்வே ஜங்ஷன், பஸ் நிலையங்கள் போன்ற முக்கியமான இடங்களில் மூன்று ஷிப்டுகளிலும் கான்ஸ்டபிள்களை நிற்க வைத்து, பயணிகள் போகும் ஆட்டோ நெம்பர், போகுமிடம் ஆகியவற்றைக்

குறித்துக் கொண்டு ஒழுங்குபடுத்த உள்ளோம். பாதசாரிகளின் வசதிக்காகக் கட்டப் பொம்மன் சிலை, தேவர் சிலை, சிம்மக்கல், செயின்ட் மேரிஸ் பள்ளி ஆகிய இடங்களில் உலக வங்கியின் உதவியோடு சுரங்கப் பாதைகள் அமைக்க உள்ளோம்.

இவற்றோடு மக்களின் முறையீடுகளைக் கால தாமதமின்றி உடனுக்குடன் கவனித்து ஆவன செய்வதற்காக, மதுரை காமராஜர் பல்கலைக்கழகத்திலுள்ள கம்ப்யூட்டரின் உதவியை நாடியுள்ளோம். அவர்களும் ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். அதற்கான ஆரம்பப் பணிகளும் துவங்கப்பட்டு விட்டன. இருந்தாலும் நான் இதிலெல்லாம் திருப்தியடைந்து விடவில்லை.

இப்போது பரவிக் கொண்டிருக்கும் மூளைக் காய்ச்சல் மிகவும் பயமுறுத்துகிறது. முதலில் கொசுக்களை ஒழிக்க வேண்டும். அதற்காக வாங்கப்பட்ட வெளிநாட்டு மெஷின் இப்போது ரிப்பேர்! அதைச் சரி செய்ய இங்கே ஆளில்லை. அதனால் தனிப்பட்ட முறையில் சில கம்பெனிகளோடு தொடர்பு கொண்டு சரிசெய்ய முடியுமா என்று முயற்சி செய்து கொண்டிருக்கிறேன்.

நாம் சுதந்திரம் பெற்று நாற்பதாண்டுகள் ஆகிவிட்டதொரு நிலையிலும் நம் மக்கள் இன்னமும் சுற்றுப்புறச் சுகாதார உணர்வு கூடப் பெறாமல் இருக்கிறார்களே என்பது ஒவ்வோர் இந்தியனும் வெட்கப்பட வேண்டிய விஷயம். என்ன செய்வது? காலையில் எழுந்து பார்த்தால், மதுரை நகரே இரவோடு இரவாகக் கழுவி விட்ட மாதிரி, சுத்தமாக இருக்க வேண்டும் என்றுதான் ஆசைப்படுகிறேன். பொது மக்களின் ஒத்துழைப்பின்றி அதை எப்படி நிறைவேற்ற முடியும்? சிந்திக்கும் போது, சில சமயங்களில் விரக்தி கூட வந்து விடுகிறது என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்..." என்று பல பிரச்னைகளையும் மனம் திறந்து பேசினார் மதுரைக் கலெக்டர் இரா. வரதராஜுலு.

உண்மையிலேயே நமது அரசு அதிகாரிகள் என்னத்தைச் செய்திருக்கப் போகிறார்கள். ரீ-விசிட் செய்து அவர்களைக் கேள்வி மேல் கேள்வியாகக் கேட்டு மடக்கி விட வேண்டும் என்ற எண்ணத்தோடு சென்ற நாம், கடைசியில் தோற்றுப் போய்த்தான் திரும்பி வர வேண்டியிருந்தது. இப்படி ஒவ்வொரு மாவட்டத்திலும் நாம் தோற்றுப் போய்த் 'திரும்பவே' விரும்புகிறோம். எனவே, தாங்கள் எடுத்த நடவடிக்கைகளால் நம்மைத் தோற்றுப் போகச் செய்த மதுரைக் கலெக்டர் இரா. வரதராஜுலு, மற்றும் அவருக்குத் துணை நிற்கும் அதிகாரிகள் ஆகிய அனைவருக்கும் மதுரை மாவட்ட மக்கள் சார்பிலும், கல்கியின் சார்பிலும், கல்கி வாசகர்கள் சார்பிலும் மனமார்ந்த நன்றிகளையும் பாராட்டுக்களையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

— இளங்கோவன்

அடுத்த இதழில்...

# பிரபாகரன் பேட்டி



மற்றும் பெரியார், தஞ்சை ரீ-விசிட்

## மாதம் ஒரு மாவட்டம்



# இந்த மாதம் 'திருநெல்வேலி — கட்டபொம்மன்' மாவட்டம்!

**கல்கி ஏற்கும் சமுதாயப் பணி**

திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்த இரண்டு விறகுக்காரப் பெண்கள், ஏதோவொரு விஷயத்தைப் பற்றி விமர்சனம் செய்து கொண்டு போகும் போது, ஒருத்தி சொன்னாளாம், 'தோசையைத் திருப்பலாம்; இட்லியைத் திருப்ப முடியுமா?' என்று! அந்த அளவுக்கு இலக்கியம்வேரோடியிருக்கும் மாவட்டம் திருநெல்வேலி மாவட்டம். குற்றாலத்தின் சிறப்பைக் குழந்தைகளும் அறிவர்.

ஆனால், அந்தக் கரிசல் மண்ணில்-இலக்கியம் வேரோடியிருக்கும் அளவுக்கு, மக்களின் வாழ்க்கைத் தரமும் வேரோடிச் செழித்திருக்கிறதா? இப்போது 'திருநெல்வேலி — கட்டபொம்மன்' மாவட்டம் என்று பெயர் மாற்றம் செய்யப்பட்டிருப்பதைத் தவிர, வேறு என்ன சாதனைகள் நிகழ்ந்துள்ளன? இவற்றையெல்லாம் வெளிச்சத்திற்குக் கொண்டு வரும் நோக்கத்தில்தான், கல்கி ஏற்றிருக்கும் சமுதாயப் பணியில் பதினோராவது மாவட்டமாகத் திருநெல்வேலி — கட்டபொம்மன் மாவட்டத்தைத்தேர்ந்தெடுத்திருக்கிறோம்.

எனவே,திருநெல்வேலி—கட்டபொம்மன் மாவட்டம் முழுவதிலுமுள்ள பிரச்னைகள், அல்லது ஊர்ப் பிரச்னைகள், இல்லையெனில் தனி மனிதர்களுக்கு இழைக்கப்பட்ட அநீதிகள் ஆகியவற்றோடு அரசியல்வாதிகளுடைய — அமைச்சர்களுடைய — அதிகாரிகளுடைய மெத்தனப் போக்குகளையும் சமூக விரோதிகளின் அட்டகாசங்களையும் சுருக்கமாக எழுதி, உங்கள் முழு முகவரியோடு கல்கி அலுவலகத்திற்கு அனுப்புங்கள். இவற்றோடு உங்கள் மாவட்ட வளர்ச்சிக்கான திட்டங்களையும், ஆலோசனைகளையும் உங்கள் மாவட்டத்தில் நிகழ்ந்துள்ள சாதனைகளையும் சேர்த்தே எழுதலாம்.

கல்கி அலுவலகத்திற்கு வரும் உங்கள் ஒவ்வொருவருடைய கடிதமும் கவனமாகப் பரிசீலிக்கப்பட்டு, அவற்றில் முக்கியமானவற்றைத் தேர்ந்தெடுத்து, ஜனவரி மாத மத்தியில் நமது கல்கி பிரதிநிதிகள் திருநெல்வேலி — கட்டபொம்மன் மாவட்டம் முழுவதும் சுற்றுப்பயணம் செய்வார்கள்; உங்களைச் சந்தித்துப் பேசுவார்கள். அவர்கள் வரும் தேதி பற்றிய முழு விவரங்களும் பின்னர் தனித்தனிக் கடிதங்கள் மூலம் தெரிவிக்கப்படும்.

சுற்றுப்பயண முடிவில், கல்கி பிரதிநிதிகள் திருநெல்வேலி — கட்டபொம்மன் மாவட்டக் கலெக்டரைச் சந்தித்துத் தாங்கள் சேகரித்த பிரச்னைக்குரிய விஷயங்களைப் பற்றி விவாதித்துப் பதில்களைப் பெறுவார்கள். அவையெல்லாம் செய்திகளாகவும் பேட்டிக் கட்டுரைகளாகவும் புகைப்படங்களாகவும் பிப்ரவரி மாதக் கல்கி இதழ்களில் பிரசுரமாகும்.

**திருநெல்வேலி—கட்ட பொம்மன் மாவட்டம் பற்றிய பிரச்னைகளும், குறைகளும், அநீதிகளும் தவிர, சாதனைகளும் கல்கி அலுவலகத்திற்கு வந்து சேர வேண்டிய கடைசி தேதி: 20.12.86.**

எல்லாவற்றையும் பிரசுரித்து விட முடியாது என்றாலும், நியாயமான பிரச்னைகள் அத்தனையும் மாவட்டக் கலெக்டரிடம் எடுத்துச் சொல்லப்படும். அதன் மூலம் அரசின் கவனத்தையும் அதிகாரிகளின் கவனத்தையும் திருப்ப முடியும் என்பதோடு, வாழ்க்கையின் யதார்த்தங்களை எடுத்துக் காட்டுவதன் மூலம் மக்களிடமும் ஒரு விழிப்புணர்ச்சியை ஏற்படுத்த முடியுமல்லவா! உடனடியாக எழுதுங்கள்.

**உறையின் மேல் 'மாதம் ஒரு மாவட்டம்: திருநெல்வேலி — கட்டபொம்மன்' என்று குறிப்பிடுதல் அவசியம்.**

**— ஆசிரியர்**

# வளரும் வயதில் குழந்தைகளுக்குத் தேவை காம்ப்ளான்

**காம்ப்ளான் ஒன்றில்தான் அவர்களுக்கு அன்றுடம் தேவைப்படும் 23 ஊட்டச் சத்துக்கள் அடங்கியுள்ளன.**

சாதாரணமாக 15 அல்லது 16 வயதிற்குள் குழந்தைகளின் வளர்ச்சி பெரும்பாலும் முழுமையடைந்து விடுகிறது.

அவர்களுடைய வளர்ச்சிக்கு நேரடியாக உதவுவது புரதம் என்ற சத்துதான். ஆகவே உங்கள் குழந்தைகளுக்கு தேவை காம்ப்ளான்—இப்போது. காம்ப்ளான் சிறந்த புரதம் கொண்டுள்ளது—பால் புரதம் (20%) அது 22 மூலதார சத்துணவுகளும் கொண்டதாகும்.

காம்ப்ளான் கிடைக்கிறது இனிய சுவைகளில்.




23

மூலதார சத்துணவுகள் திட்டமிட்ட விகிதங்களில்

பால் சேர்த்திடத் தேவையில்லை.



**காம்ப்ளான்® — திட்டமிட்ட பரிபூர்ண உணவு**

B84. GLC. 120 Tm

சாமியே சரணம் ஐயப்பா



## சபரிமலை ஸ்ரீ ஐயப்ப சன்னிதானத்தில் பூஜை செய்ய இரண்டு திட்டங்கள்:

**சபரிமலை ஸ்ரீ ஐயப்ப விபூதிப் பிரசாத திட்டம்:**

ஒவ்வொரு மலையாள மாதமும் முதல் ஐந்து நாட்கள் சபரிமலை ஸ்ரீ ஐயப்பன் கோவில் திறந்து வைக்கப்பட்டுப் பூஜை நடைபெறுகிறது. இந்த நாட்களில் உங்கள் பெயருக்கு அர்ச்சனை செய்து தபால் மூலம் ஸ்ரீ ஐயப்பனின் விபூதிப் பிரசாதம் அனுப்பி வைக்கப்படும். நீங்கள் செய்ய வேண்டியது சபரிமலை தேவஸ்வம் கமிஷனர் பெயரில் தனலக்ஷ்மி பாங்கின் ஏதாவதொரு கிளையில் ரூ. 500/— முதலீடு செய்தால் போதுமானது. அர்ச்சனைகள் மாதந்தோறும் தவறாமல் ஐந்து ஆண்டுகளுக்கு நடைபெறும்.

**சபரி மலை ஸ்ரீ ஐயப்ப ஜென்ம நக்ஷத்திர பூஜை திட்டம்:**

மண்டலம் — மகரவிளக்கு காலத்தில் ஸ்ரீ தர்மசாஸ்தாவிற்கு உங்கள் ஜென்ம நக்ஷத்திரத்தன்று பூஜை செய்ய வேண்டுமானால், தனலக்ஷ்மி பாங்கின் ஏதாவதொரு கிளையில் சபரிமலை தேவஸ்வம் கமிஷனர் பெயரில் ரூ. 5000/— முதலீடு செய்யுங்கள். ஐந்து ஆண்டுகளுக்குத் தொடர்ந்து பூஜை நடைபெறும்.

மேற்கொண்டு விவரங்களுக்கு:



**தி தனலக்ஷ்மி பாங்கு லிமிடெட்**

பதிவு அலுவலகம், திருச்சூர், கேரளா.

பம்பாவில் எங்கள் பாங்கின் கிளை அலுவலகம் உள்ளது. எருமேலியிலும் சன்னிதானத்திலும் தற்காலிகக் கிளைகள் மண்டலம் — மகரவிளக்கு காலங்களில் செயல்படும்.





# சிவப்பு மலர்கள்

ஊட்டியில் மலைப் பச்சைகளுக்கு இடையில் காதலி பரிதவிப்புடன் 'வேணுங்க' 'வேணுங்க' என்று பாய்ந்து வந்து காதலனைத் தழுவும்போது, காதலன், 'வேணுங்க இதான் வேணுங்க' என்று பதிலுக்கு அணைத்துக் கொள்வது கோன் ஐஸ்க்ரீமை அப்படியே நாக்கில் வைத்துக் கொண்டது போல் ஜிலுஜிலுப்பு – கம் – கிளுகிளுப்பு. (பம்பளிமாஸ் கன்ன கதாநாயகி காயத்ரி குமார்தான்!)

இப்படி ஸீரியஸான சூடான கதையில் டைரக்டர் தூவியிருக்கும் முந்திரிப் பருப்புகள் சில உண்டு!

மெயின் கதை தொழிலாளி – முதலாளி போராட்டம். அது முதலாளியின் குள்ள நரித்தனம், அப்பாவித் தொழிலாளியின் ஏமாளித்தனம், ஜால்ராக்களின் ஜல் ஜல் சங்கீதம் ஆகியவற்றுடன் கொஞ்சம் சோம்பலான நதியின் வேகத்தோடு ஓடுகிறது.

மகள் ஒரு தெய்வம், மனைவி ஒரு தெய்வம் என்று சொல்கிற முதலாளி ஜெய்சங்கர் கண்ணியப் பாதையிலிருந்து கயவாணித்தனத்திற்குப் போகிறாரே என்ற ஆதங்கம் எழாமல் இல்லை.

தொழிலாளி – சந்திரசேகர்.

ஒரு பாத்திரம் அர்த்தத்தோடு உயிர்க்கும்போது, அந்தப் பாத்திரத்திற்கு உயிர் வந்துவிடுகிறது என்கிற வகையில் பார்த்தால், இந்தப் படத்தில் சந்திரசேகர் பாத்திரம் ஜீவனுள்ள பாத்திரம். தங்கை கையில் புடைவையுடன் எதிர்கால மாப்பிள்ளையை வேண்டாம் என்று மறுக்கச் செல்லும் இடத்திலும் சரி, கடைசியில் நெருப்புக் காயத்துடன் துடித்துக் கொண்டே வசனம் பேசும்போதும் சரி, சந்திரசேகர் ஜமாய்த்திருக்கிறார். ஆனால் தொழிலாளி என்றாலே முதலாளியின் ஜன்மப் பகைக்காரன் என்பதுபோல் முதலாளியைத் திட்டிக் கொண்டே படத்தில் அறிமுகமாவதுதான் மிகையும் செயற்கையும் சேர்ந்த கலவை!

மனத்தில் 'நிற்க' வேண்டுமென்பதற்காகவோ என்னவோ எட்டு மணி டேவிட், பாயின்ட் பட்டம்மா என்று இரண்டு ஸ்பெஷல் பெயர்கள். பாயின்ட் பட்டம்மா ரோலில், மாதுரி படபடபட என்று நன்றாகவே பொரிந்தாலும்கூட, படத்தில் ஒப்புக்குச் சப்பாணி. எட்டு மணி டேவிடும் அதே அதே!

'ஒரு பொம்மலாட்டம் நடக்குது' 'நான் உனக்குத்தான்னு' இரண்டு பாடல்களிலும் கொஞ்சம் பழைய எம்.எஸ். விஸ்வநாதன் தெரிகிறார். இன்னும் பழைய எம்.எஸ்.வி. தெரிய இன்னும் கொஞ்ச காலம் போக வேண்டுமோ என்னவோ?

ஸ்ரீப்ரியா பாவம். சிங்கப்பூர் ஷோ பொம்மை போல ஆரம்பத்தில் சில நிமிஷங்கள்; நடுவில் சில நிமிஷங்கள்; கடைசியில் சில நிமிஷங்கள்.

எப்படியும் சுரேஷும், சந்திரசேகரும் காப்பாற்றிவிடப் போகிறார்கள் என்று தெரிந்தாலுங்கூட அந்த க்ளைமாக்ஸில் ஒரு பரபரப்பை உண்டாக்க முடிந்திருக்கிறதென்றால் அது டைரக்டரின் வெற்றிதான்.

தொடக்கத்திலிருந்து கடைசி வரை கொட்டாவியே வரவில்லை. ஸோ, கீப் இட் அப் டைரக்டர் சந்திரசேகர்!

—ஜெயமன்மதன்.


ஜியா


பாரத-சோவியத் நட்புறவு




ஏழு எம்.எல்.ஏ.க்கள் பதவி நீக்கம்— சபாநாயகர் நடவடிக்கை
எதிர்ப்பு
ஜனநாயகம்






கல்யாணசுந்தரம்


மேலும் பலர் பதவி இழப்பர்! போகப் போகத் தெரியும்!
கரெக்ட்! போகப் போகத் தெரியும்!
ஆமா. போகப் போகத் தெரியும்!
சரிதானே! போகப் போகத் தெரியும்!




# கல்கி

1986 டிசம்பர் 7
மலர் 45 இதழ் 19
அக்ஷய கார்த்திகை 21




# பதவி பறித்த பாண்டியன்!

நீதிமன்றத்துடன் மோதுவதென்பது நமது சட்டமன்றத் தலைவர் பாண்டியனுக்குப் பாதாம் அல்வா சாப்பிடுவது மாதிரி! நீதிமன்ற நீதிபதியின் தீர்ப்பைவிட ஜனநாயகத்தில் சட்டமன்றத் தலைவரின் தீர்ப்பே மேலானது என்று அவர் நிரூபிக்க முயல்வது இது முதல் தடவை அல்ல. 'நீதிமன்றத்தில் வழக்கு இருப்பதால் எம்.எல்.ஏ.க்களின் நடத்தை பற்றி ஒரு முடிவுக்கு இப்போது வருவது அவசரப்படுவதாகும்' என்ற நெடுஞ்செழியனின் கருத்தை ஏற்றுக் கொள்வதுபோல் தோன்றிய பாண்டியன் திடீரென்று இரு தினங்கள் சென்று தாமே ஒரு தீர்ப்பு வழங்கி, ஏழு எம்.எல்.ஏ.க்களின் பதவிகளைப் பறித்திருக்கிறார்.

அரசியல் சாசனத்தின் ஒரு பகுதியை நாம் மதிக்கவில்லை என்று காட்டிக் கொள்வது, அரசியல் சாசனத்தையே நாம் மதிக்கவில்லை என்றாகுமா? இதுதான் இன்றையக் கேள்வி. தி.மு.க. எம்.எல்.ஏ.க்கள் எரித்தது சாசனத்தையல்ல, அதன் ஒரு பகுதியை மட்டும் தாங்களே தங்கள் கைப்பட ஒரு தாளில் எழுதி அந்தத் தாளைத்தான் எரித்துள்ளனர். இவ்வாறு சாசனத்தின் ஒரு பகுதியை நாம் மதிக்கவில்லை என்று காட்டிக் கொள்வது தவறு என்றால் கடந்த பல ஆண்டுகளில் சாசனத்தில் எத்தனையோ பல மாற்றங்கள் செய்யப்பட்டுள்ளனவே, அவையெல்லாமே மத்தியில் உள்ள ஆளும் கட்சி சாசனத்தை மதிக்கவில்லை என்பதற்கு எடுத்துக்காட்டுக்கள்தானே? சாசனத்தை மாற்ற வேண்டும் என்று தமிழக அரசு சார்பில் ஒரு தீர்மானம் சட்டசபையில் கொண்டுவரப்பட்டதே அது கூட சாசனத்தை இழிவு படுத்துவதாகத்தானே ஆகும்?

சாசனத்தில் ஒரு மாற்றம் கோரி அந்தக் கோரிக்கையை மத்திய அரசு மதிக்காத போது, நமது கோரிக்கையை மேலும் வன்மையான விதத்தில் வெளிக்காட்ட, அந்தப் பகுதியை மட்டும் எழுதி எரிப்பது சாசனத்தையே இழிவுபடுத்துவதாகும் என்றால், மிருக பலப் பெரும்பான்மை இருப்பதால், சாசனத்தைக் கண்டபடியெல்லாம் மாற்றி அமைப்பது மட்டும் சாசனத்தை மதிப்பதாக ஆகிவிடுமா? மாற்றம் கோருவது தவறு என்றால் மாற்றுவது சரியா?

ஜனநாயக மேல்நாடுகளில் தேசியக் கொடியை நீச்சல் உடையாகத் தைத்துப் போட்டுக் கொள்கிறார்கள். தேசிய கீதத்தை ராக் அண்ட் ரோல் இசையில் அமைத்துப் பாடுகிறார்கள். இவையெல்லாம் தவறாகக் கருதப்படுவதில்லை. அதைப் பார்த்து நாம் காப்பி அடிக்கத் தேவையில்லைதான் என்றாலும் ஏற்கெனவே சாசனப் பகுதியை எரித்து அண்ணாதுரை வழிகாட்டியிருக்கிறார் என்பதையும் பஞ்சாபில், பகுதியை அல்ல, சாசனத்தை முழுமையாகவே எரித்த அகாலிகள், எம்.எல்.ஏ. பதவி இழக்காததோடு இன்று அமைச்சர்களாகவும் இருக்கிறார்கள் என்பதையும் நாம் மறப்பதற்கில்லை.

சாசனத்தின் ஒரு பகுதியை எரித்தது சாசனத்தையே இழிவு படுத்தியதாகும் என்பதாகக் கருதப்பட்டு, எம்.எல்.ஏ.க்களின் பதவிகள் பறிக்கப்படும்போது அவர்களைத் தேர்ந்தெடுத்து அனுப்பிய மக்களை இழிவுபடுத்துவதாகாதா? இது ஜனநாயகத்தில் நியாயமாகுமா? அத்தனை அதிகாரம் சட்டமன்றத் தலைவருக்கு இருக்கிறதா? என்ற கேள்விகளும் எழுகின்றன.

தி.மு.க. (மாஜி?) எம்.எல்.ஏ.க்களின் நடத்தையும் சரி, பாண்டியனின் தீர்ப்பும் சரி, நாட்டு நலனில் மனப்பூர்வமான அக்கறை கொண்டு நல்லெண்ணத்துடன் செய்யப்பட்ட காரியங்களா அல்லது வேறு உள்நோக்கங்களுடன் நடந்த நாடகங்களா என்பனதாம் முக்கியமாகக் கவனிக்கப் பட வேண்டிய விஷயங்கள்.

இதை ஆளுனரும், தேர்தல் கமிஷனும், நீதி மன்றமும் ஆராயட்டும்.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

# நாம் தான்; நாமே தான்!

* தலையங்கத்தில், நீங்கள் கேட்ட விவஸ்தையற்றவர்கள் நாம்தான் — நாமேதான்! போகப் போகப் பாருங்கள்—நமக்கெல்லாம் முட்டிக் கொள்ளத் தமிழகத்தில் சுவரே கிடைக்காது.

ஸ்ரீவில்லிபுத்தூர், வி. ஏ. பாலசுப்ரமணியன்.

* "முரண்பாடுகளில் மொத்த உரு பற்றிய தலையங்கம் கண்டேன்! உங்களைப் போலவேதான் நாங்களும், இப்போது சிண்டைப் பிய்த்துக் கொள்ளும் நிலையில் இருக்கிறோம்!

திருச்சி — 20, ஆர். அப்துல் சலாம்.

* தேவையான அளவு பாராட்டி, குட்ட வேண்டிய இடத்தில் குட்டி, பாட்டியம்மா சொன்ன மாவீரன் விமர்சனம், அம்சமாக இருந்தது. ஆனாலும், புன்னகை மன்னன் படத்தில், ரேவதி என்ற நடிகை(!) அருமையாக 'ப்ரேக் டான்ஸ்' ஆடி நடித்து, ரசிகர்களிடம் வெகுவாகப் பாராட்டுப் பெற்றார். ஆனால் அவரைப் பற்றி ஒரு வரி கூட எழுதாத, உமது விமர்சகரை என்ன செய்வது?

கொரட்டூர், கே. என். சீனிவாஸ்.

* சித்தி சிறுகதை படித்தேன். பழைய சித்திரவதை டைப்பில் கதை செல்லும் என்ற எண்ணத்தோடு படித்தால், ஒரு புதிய அநுபவத்தை அழகாகச் சித்திரித்திருந்தார் கதாசிரியர் கல்யாண குமார். ஒரு கருத்தாழமிக்க கதையைப் படித்த திருப்தி மேலிட்டது: பாராட்டுக்கள்!

குடியேற்றம் — 1, கோ. ராமலிங்கஜோதி.

* கோவை சிந்தாமணி கூட்டுறவுச் சிறப்பங்காடி — ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம் போல! மீதியுள்ள கூட்டுறவுச் சிறப்பங்காடிகளிலும் இதே கதை தான்!

விருத்தாசலம் — 1, அ. கயல்விழி.

* 'கோவை மாவட்டத்தில் கல்கி' பிரமாதம். அதுவும் கலெக்டருடன் தாங்கள் நடத்திய பேட்டி அசத்தியது. Keep it up!

கோவை — 31, நித்யா.

* ஏதோ, வேலை செய்தோம், ஓய்வு பெற்றோம் என்று எண்ணும் பல தலைமையாசிரியர்கள் மத்தியில் திருமதி சிவபாக்கியம் வித்தியாசமானவர். பொள்ளாச்சி நகரசபைப் பெண்கள் மேல்நிலைப் பள்ளி கொடுத்து வைத்த பள்ளி!

திருவிடைமருதூர், நாதன்பாபு.

* 'அட! அட்டைப்படமா? இல்லை இயற்கையை அள்ளிக் கொண்டு வந்த படமா? பல புத்தகங்களுக்கு நடுவில் இவ்வாரக் "கல்கி" தனித்தன்மையோடு மின்னியது.'

குத்தாலம் — 1, எஸ். ராஜா.

* 23.11.86 கல்கி இதழில் பாரதியார் பல்கலைக் கழகத்தைப் பற்றிய சில தகவல்களை வெளியிட்டுள்ளீர்கள். அணுகுண்டு போடுகிறோம் என்று வெங்காய வெடிகளை வீசியிருக்கிறார்கள். இன்று உலகம் முழுவதும் எல்லாப் பல்கலைக் கழகங்களிலும் போட்டி போட்டுக் கொண்டு ஆராய்ச்சிகள் வெகுவேகமாக நடைபெற்று வருகின்றன. இங்கேயோ ஆசிரியர்கள் ஒருவரை ஒருவர் அழிப்பதிலேயே கண்ணும் கருத்துமாக இருக்கிறார்கள். கோடிக்கணக்கான ரூபாய்களை அரசாங்கங்கள் இந்த முயற்சிக்காகவா அள்ளிக் கொட்டி இருக்கின்றன? தொலைநோக்கோடு செயல்படாமல் 'சீப்பாப்புலாரிட்டி'க்கு ஆசைப்படும் ஆசிரியப் பிரதிநிதிகளால் பல்கலைக்கழகம் மேம்பாடடையாது. அரசு பெருந்தன்மையோடு அனைத்து ஆசிரியர்களுக்கும் பல்கலைக்கழக நிர்வாகத்திலே இடம்பெற அநுமதி அளித்திருக்கிறது. அதனை முழுவதுமாகப் பயன்படுத்திக் கொண்டு நம்மையும், நம் கல்லூரிகளையும், பல்கலைக்கழகங்களையும் உயர்த்துவது ஆராய்ச்சி மனப்பாங்குடைய ஆசிரியர்களின் கடமை.

கோவை — 6, எம். ராஜேந்திரன்.

(மேற்படி கட்டுரையில் துணைவேந்தர் பேட்டியின்போது, 'நானே ஷெட்யூல்ட் காஸ்ட்'தான் என்று அவர் கூறுவதாக ஒரு வரி உள்ளது. ரீடர் பதவிக்கு வர்தால் என்ற பெண்மணியின் மனுவைப் பரிசீலனை செய்த தேர்வுக்குழுவில் ஒருவராக விளங்கிய பார்வதம்மா என்பவர் அப்படிச் சொன்னதாக இருக்க வேண்டும். தவறு நேர்ந்ததற்கு வருந்துகிறோம். — ஆசிரியர்)

* திருமயம், கா. அப்துல்மஜீத் (16.11.86 கல்கி) கருணை உள்ளம் கொண்டு கோவில்களின் உபரி வருமானத்தைக் குழந்தைகள் சத்துணவுத் திட்டத்துக்குப் பயன்படுத்தத் தராகளிடம் சிபாரிசு செய்யும் நேரத்தில் நாகூர் தர்கா போன்ற முஸ்லிம் பள்ளிவாசல்களில் கிடைக்கும் உபரி வருமானத்தையும் சத்துணவுத் திட்டத்துக்குக் கொடுக்கும்படி ஓர் இயக்கம் துவங்குவாரா?

சென்னை — 78, கே. பி. கணேசன்.

* "மூளைக் காய்ச்சலை ஒழிக்கவே முடியாதா?" என்ற தலைப்பிட்டு — மரியாதைக்குரிய டாக்டர் பி. ராமமூர்த்தி அவர்களின் பேட்டியைப் (16.11.86 கல்கி) படித்தேன். நான் பார்த்த ஹோமியோபதி மருத்துவத்தில் மூளைக்காய்ச்சல் மட்டுமல்ல, போலியோ முதல் புற்றுநோய் வரை, பல வியாதிகள் குணப்படுத்தக் கூடியவைதான் என்பதை என் அநுபவங்களிலிருந்து உறுதி கூறுகிறேன்.

போடிநாயக்கனூர், பி. பொன்ராஜ்.

(இவ்வாறு வேறு பல ஹோமியோபதி மருத்துவர்களும் விரிவான ஆதாரங்களுடன் எழுதியுள்ளனர். — ஆசிரியர்)

# பொன்னியின் செல்வன்

அமரர் **கல்கி**

சந்திரா

இராஜ ராஜ சோழனின் இளம்பிராயத்தில் நிகழ்ந்த
மகத்தான சரித்திரத் தொடர் கதை

# கல்கி

**பொங்கல் சிறப்பிதழில்**
**ஆரம்பம்**

* ஏ. கே. நாசர், லெட்சுமாங்குடி.

? சமீபத்தில் நீங்கள் பார்த்து ரசித்த ஆங்கிலப் படம் எது?

! 'ஓமார் முக்தார்' — நடிப்பு, படப்பிடிப்பு எல்லாம் அபாரம் என்றாலும் அந்த அளவுக்கு மீறிய கொடூரக் காட்சிகளை என்னால் ரசிக்க முடியவில்லை. அவ்வப்போது கண்களை மூடிக் கொண்டேன். கடைசியாக முழுக்க முழுக்க ரசித்து மகிழ்ந்த படம், அமெரிக்கத் தகவல் நிலையத்தினர் திரையிட்ட நகைச் சுவைப் படவிழாவில் ஒன்றான 'ஸெவன் இயர் இட்ச்.' காலஞ்சென்ற 'மரிலின் மன்ரோ' நடித்த இந்தப் படத்தில் காட்சிக்குக் காட்சி குற்றமற்ற ஹாஸ்யம். 'சில ஆண்டுகளுக்குப் பின் இரண்டாவது தடவையாகப் பார்க்கிறோம்' என்ற எண்ணத்தையே மறக்கடித்து மகிழச் செய்தது. 'மனைவி குழந்தைகள் வெளியூர் சென்றுள்ள போது கணவனுக்கு ஏற்படுகிற சபலம்' என்ற சின்ன கதைக் கருதான். அந்தச் சுனையிலிருந்து பெருக்கெடுத்ததோ சிரிப்பு வெள்ளம்!

# டிரான்ஸிஸ்டர் குண்டு வெடிப்பு அதிகமாகிவிட்டதே?

* இரா. வளையாபதி, தோட்டக்குறிச்சி.

? சட்டத்தை எரித்ததினால் தமிழக சட்ட மன்ற தி. மு. க. உறுப்பினர் சிலரின் பதவி பறிபோகும் அபாயம் ஏற்பட்டிருப்பது பற்றிச் சில வரிகள்...?

! நீங்கள் கேள்வி எழுப்பிய தேதிக்குப் பிறகு அபாயம் மெய்யாகிப் பதவி போயே போய் விட்டது! லேட்டஸ்ட்டாக ஆளுனர் மூளையைக் குடைந்து கொண்டிருக்கிறார் — பாண்டியன் செய்த காரியம் சரியா தப்பா என்று! ஆக மொத்தம், தி. மு. க. பண்ணின ஒரு காரியம் ரொம்பப் பேருக்கு மூளைக்கு வேலை கொடுத்திருக்கிறது என்ற அளவில் சந்தோஷப்படலாம். 'ஆளுனர் என்று ஒருவர் எதற்கு?' என்று கேட்பவர்களுக்கு அந்தப் பதவிக்கு அவசியமும் முக்கியத்துவமும் இருக்கிறது என்ற விடை மீண்டும் கிடைத்திருக்கிறது!

* என். ரவி, திருவெறும்பூர்.

? அ. தி. மு. க. வுடன் இணைந்ததன் மூலம் எஸ். டி. எஸ். மந்திரி பதவி பெற வாய்ப்புண்டா?



* பெண் தாகூர்?

* சிரிப்பு வெள்ளம்

! அவருடைய சுயமரியாதை இழப்புக்கும் மௌனத்துக்கும் ஏதேனும் ஒரு விலை இருக்கத்தான் வேண்டும். அது மந்திரி பதவியா வேறு ஒன்றா, பொறுத்திருந்து பார்ப்போம்.

* ஜி. மெய்யப்பன், லெட்சுமாங்குடி.

? விளம்பரம் இல்லாமல் இருக்கும் தற்போதைய தலைவர் யார்?

! டி. வி. யைப் பொறுத்தமட்டில் தற்போது ராஜீவ் காந்தி! அவருக்குத் தரப்பட்டு வந்த விளம்பரம் கணிசமான அளவில் குறைந்து போய்விட, அவ்விடத்தை கார்பச்சேவ் விஜயக் காட்சிகளும் ருஷ்ய நாடு பற்றிய செய்திப் படங்களும் ஆக்கிரமித்துக் கொண்டிருக்கின்றன!

* டி. எல். ரெட்டி, வேளிடுபட்டி.

? ஏழ்மை, வறுமை — வித்தியாசம்?

! ஏழ்மை என்பது கிடையாது. ஏழைமை என்பதே சரி. பொருளாதார ரீதியாகப் பாதிக்கப்படுவது மட்டும்தான் ஏழைமை. வறுமை என்பது மனத்தளவிலும் உண்டு. பண்பாட்டில் ஒருவனை வறியவன் என்று கூறுவோம், ஏழை என்று சொல்வதில்லை. ஆனால் அறிவில் ஏழை என்று கூறுவதுண்டு!

* டி. ஆபாராமன், குடியாத்தம்.

? ஜனவரி மாதத்துக்குப் பிறகு, முதல் மந்திரி பதவியை விட்டு விலகி, தேசிய அரசியலில் ஈடுபடுவேன் என்று ஹெக்டே கூறியுள்ளாரே?

! தேசிய அரசியலில் 'ஈடுபடுவேன்' என்று கூறவில்லை. 'ஈடுபட விருப்பம்' என்று சொல்லியுள்ளார். முதல்வர் பதவி அலுத்துவிட்டதாகவும் பேசியுள்ளார். ஆனால் அவர் விருப்பம் நிறைவேற, கர்நாடக ஜனதாக் கட்சி அரசியல் அனுமதிக்குமா என்பது சந்தேகமே. தேசிய அரசியலுக்கு அவர் பொருத்தமானவர்தான் என்பதில் சந்தேகமில்லை.

அது, கர்நாடக மாநிலத்துக்கு நஷ்டமாகிப் போகும் என்பதிலும் ஐயமில்லை.

* கே.ஆர்.கமலஹாசப்ரியன்,காரிமங்கலம்.

? ஹெக்டேயின் செயல் முறை பற்றி?

! அண்மையில் நடந்த துணைத் தேர்தல்களில் கர்நாடகாவில் ரெய்ச்சூர் நாடாளுமன்றத் தொகுதியில் இ. காங்கிரஸ் வெற்றி பெற்றாலும் மூன்று சட்டமன்றத் தொகுதிகளிலும் ஜனதா மகத்தான வெற்றி பெற்றிருப்பது போதாதா, ஹெக்டேயின் செயல் முறை செயல் திறனுடன் கூடியது என்பதை நிரூபிக்க!

* ஆற்காடு எழிலன், திருச்சி — 2.

? மக்களால் புரிந்து கொள்ள முடியாதது எது?

! நேற்று ரேடியோ தொடர்பு சாதனங்களை ஈழப்போராளிகளிடமிருந்து பறித்து விட்டு இன்று திருப்பிக் கொடுப்பது என்பது சிறிதும் புரிந்து கொள்ள முடியாத காரியம்.

## நீங்கள் கேட்டவை — தராசு

பற்றி...?

! பாலா—ஒரு பெண் கவிஞர். காமர்ஸ் படிக்கும் கல்லூரி மாணவி. கவிதை எழுத வருவது சுவையானது. பொன்மணி வைரமுத்துவின் ஆதரவு கிட்டியது சுகமானது. கவிதைகளைக் 'காவ்யா' நூலாக வெளியிட முன்வந்தது ரசமானது. பொன்மணி கூற்றுப்படி இவரை ஒரு 'பெண் தாகூர்' என்று ஒப்புக் கொள்வது கஷ்டமானாலும் ஆழமான தத்துவக் கருத்துக்கள் கொண்ட வித்தியாசமான புதுக் கவிதைகளைப் படைத்திருக்கிறார் பாலா என்பதை ஒப்புக் கொள்ளவே வேண்டும். 'நீயும் நீயும் நானும் நானும்' என்ற நூலிலிருந்து மாதிரிக்குச் சில வரிகள் :

கடல் மூழ்கி பெரியதொரு
முத்தொன்றை அகழ அவா.
ஆனால் கரையில் அமர்ந்து


* செயல் திறன்


* மந்திரி பதவி?


* செய்தது சரியா?


* மூளைக்கு வேலை.

'துணிந்த பின் எண்ணுவம் என்பது இழுக்கு' என்பதை மறந்தது ஒருபுறமிருக்க, ஈழப் போராளிகள் நம்மில் ஒருவராக இந்நாட்டுச் சட்டதிட்டங்களுக்கு உட்பட்டு இங்கே வாழ்கிறார்களா அல்லது, அவர்களுக்கு விசேஷ அந்தஸ்தும் அதன் தொடர்பான சலுகைகளும் வழங்கப்பட்டுள்ளனவா என்பதை மத்திய மாநில அரசுகள், அவர்களைப் பதவியில் வைத்துள்ள இந்நாட்டு மக்களுக்குத் தெளிவுபடுத்துவது அவசியம். ஈழப்போராளிகளுக்குத் தனி அந்தஸ்து, தனிச் சட்டம் என்றால் தமிழ் ஈழ அரசு இங்கு செயல்பட அனுமதித்து, தமிழ் ஈழம் இலங்கையில் அமைய அவர்களுக்கு வாய்ப்பும் வசதியும் செய்தளித்தது போல் அர்த்தம் செய்து கொள்ளப்படும். அப்படி அர்த்தம் செய்து கொள்ளப்படுவதை நமது மத்திய மாநில அரசுகள் விரும்புகின்றனவா? இவற்றையெல்லாம் ஒளிவு மறைவில்லாமல் அரசு மக்களுக்குப் புரிய வைக்க வேண்டும்!

* இராமலிங்க், தக்கலை.

? அண்மையில் படித்த புத்தகம் ஒன்று

ஆழத்தை
அளந்து கொண்டிருக்கிறேன்.

............

பிறகுதான் புரிகின்றது —
கடலைத் தேடி வந்துவிட்டு
கடற்காற்றிலேயே
மயங்கிப் போகின்றவள் என்று...

* ஆர். சித்ரா, அல்லூர்.

? டிரான்சிஸ்டர் குண்டு வெடிப்பு அதிகமாகிவிட்டதே?

! ''மேலும் சில மந்திரிகள் பதவி நீக்கம் செய்யப்படுவார்கள்'' என்பது போன்று எம். ஜி. ஆர். அவ்வப்போது வெடிக்கும் குண்டுகளை விடவா?

* ரூ. 10 பரிசு பெறுபவர்:

என் ரவி,
தாஞ்சிலகம்,
திருவெறும்பூர்,
திருச்சி — 620 013.

''வர்றபோறவங்களையெல்லாம் கண்டபடி இடிச்சுக்கிட்டுப் போறானே, யாருங்க அந்தப் பையன்?''

''ஹி, ஹி... நம்ம பையன்தான்!''

''பேர் என்ன?''

''பல்லவன்!''

— நடேஷ்ஷா.

''நான் ஒரு மார்வாடி இளைஞனைக் காதலிக்கிறேன்னு எப்படி கரெக்டா சொல்றே?''

''அதான் உனக்கு லவ் லெட்டர்லேயே அவன் எழுதியிருக்கானே — 'உன்னை வட்டியும் முதலுமாகக் காதலிக்கிறேன்!' என்று!''

— நடேஷ் ஷா

''தொண்டர்களையெல்லாம் திரண்டு வரச் சொல்லுங்க, நம்ம கட்சியைக் கலைச்சுட்டு தாய்க் கட்சியோடு இணைஞ்சுடுவோம்.''

''அவங்க ஏற்கெனவே அங்கே போய்ச் சேர்ந்து ரொம்ப நாளாச்சு தலைவரே!''

— கரடிகுளம் ஜெயபாரதிப்ரியா



''ஏன் டாக்டரை விட்டுட்டு வக்கீலைக் காதலிக்கிறாய்?''

''எனக்கு இப்பொழுது உடம்பு குணமாகிவிட்டது. ஆனால் ஒரு வழக்கில் சிக்கிக் கொண்டேன்!''

— அரகண்டநல்லூர் சாதிக்பாஷா

''சமையல்காரர் பந்திக்கு வந்து ஒவ்வொரு இலையாய் நின்னு கவனிச்சுட்டுப் போறாரே.... எல்லோரும் சமையலை ருசிச்சுச் சாப்பிடறாங்களான்னு தெரிஞ்சுக்கவா?''

''இல்லே! அவரோட மூக்குப் பொடி டப்பா சாம்பார்ல விழுந்துடுச்சாம். அதைத்தான் இலை இலையாய்த் தேடிக்கிட்டிருக்கார்!''

— கிரிஜா மணாளன்

இவன்: நேற்று எதிர் வீட்டுப் பெண் மாடியிலிருந்து எனக்கு ஃப்ளையிங் கிஸ் கொடுத்தாள்!

அவன்: அதுசரி, உன் கன்னம் ஏன் சிவந்திருக்கிறது?

இவன்: இது அவளுடைய அப்பா எனக்குக் கொடுத்த ஃப்ளையிங் கிக்!

— வி. வைத்தியநாதன்



ஒருத்தரைப் போல் ஒருத்தர் நிறம் இருத்தல் இல்லே.

# பொருத்தமளிக்க உமக்கென்றே 3 வித வண்ணச் சாயல்களில் வருவது லக்மே காலமைன் ஒன்றே.

லக்மே காலமைன் ஒன்றுதான்
மூவித வண்ணச் சாயல்களில்
மோகனமாய் வருகுது:
நேச்சரல், ஸீட், கோல்டு, இதில்
உமக்கொன்று சேர்த்தி,
ஒருங்கிணைய நேர்த்தி-எண்ணிலா
வண்ண மேனியரை இனம்பிரித்து
உணருதே லக்மே. இன்மணமுடன்
மேனிமீது இலகுவாய் இழையும்
லக்மே காலமைன் — தனிநிற
உரிமையைத் தருகுது உமக்கு.
பரிட்சார்த்தப் பேக்காகவும்
கிடைக்குது பதம்பார்க்க வசதியாக

நேச்சுரல்
—மாநிற
மேனியருக்கு

ஸீட்
—சிகப்பு
மேனியருக்கு

கோல்டு
—கருவண்ண
மேனியருக்கு







# லக்மே
# காலமைன்

சரும வண்ணம் எவ்வண்ணம்
சாயலுண்டு அவ் வண்ணம்.

Tm

# காத்திருக்கிறார்கள்

அவர்கள் — சைக்கிளில் காரியரில் செருகிய லத்திக் கம்பும், முன்புற விளக்கின் மேல் சுழற்றி வைக்கப்பட்டிருந்த தொப்பியுமாய்...

மாலை வெளிச்சம் சுழன்று தரைக்கடியில் புதைந்து 'பட்டுக் கருநீல' குடை விரிந்த நேரம். இப்போதிருக்கும் வானத்து வர்ண ஜாலங்கள் விரைவில் சோகம் போர்த்திக் கொள்ளும்; வானத்தின் கருமை அடர்ந்து குடையின் பொத்தல்கள் காட்டும்.

இவை தினசரி வாடிக்கைகளானாலும் அவற்றை நினைத்துப் பார்க்கக் கூட விரும்பாதவர்கள் போல் அவர்கள் 'சைக்கிளில் லைட் இல்லாத கேஸி'ற்காகக் காத்திருந்தார்கள்.

மதுரைக் கல்லூரியின் அருகில் படர்ந்திருக்கும் பாலத்தை ஒட்டினாற் போன்ற சாலையை அன்று தேர்ந்தெடுத்திருந்தார்கள். பாலத்தின் இறக்கத்தில் வேகமாய் இறங்கி,பெரிய வட்டமாய்ச் சுழன்று, சாலைக்குள் பிரவேசிக்கிற யாரும் பிடிபட்டு விடுகிற பிரதேசத்தில், அவ்விரு காவலர்களும் நின்று கொண்டிருந்தார்கள்.

இன்னமும் ஸ்கூலிலிருந்து, அல்லது ட்யூஷன் முடிந்து யூனிஃபாரத்துடன் திரும்பி வருகிற பெண் பிள்ளைகள், யதேச்சையாய் அவர்கள் பின்னால் பேசிக் கொண்டே செல்லும்படி நேர்ந்துவிட்ட பாலிடெக்னிக் மாணவர்கள், ஆபீஸ் முடிந்து வீட்டிற்கு விரைகின்றவர்கள் என்று தெருவில் சொல்லிக் கொள்கிற அளவிற்கு நடமாட்டம் இருந்தது.

கணேசன் தலையைக் கோதிவிட்டான். தொப்பியைக் கழற்றி வைத்தபின்தான் தலையில் வியர்வை அடங்கியிருக்கிறது. காய்ந்த உதடுகளை ஈரப்படுத்திக் கொண்டான்.

''கோபாலு... இன்னும் நல்லா இருட்டட்டும். போய் டீ அடிச்சிட்டு வந்துரலாமா?'' என்றான். இதற்கு முந்தின சந்தர்ப்பங்களில் 'இன்னும் நல்லா இருட்டல்லேன்னுதான் லைட் போடலேண்ணே' என்று காரணம் சொன்ன சில கேஸ¬கள் அவனுக்கு ஞாபகம் வந்ததே அதற்குக் காரணம்.

கோபாலு தொந்தியைத் தடவிக் கொண்டான். போலீஸ் உத்தியோகத்தில் சேர்ந்த போது இல்லாத தொந்தி... இப்போது விழுந்திருப்பது. பிரமோஷன் ஆவதற்கு அறிகுறி என்று நினைத்திருந்தான். தனக்கு மேலிருக்கும் பெரும்பாலான இன்ஸ்பெக்டர்களைப் பார்த்தபிறகு அவன் அந்தக் கணிப்பிற்கு வந்திருந்தான்.

வெகுநேரம் பேசாமலிருந்து விட்டது போல அவர்களுக்குத் தோன்றியிருக்க வேண்டும்.

''நம்ம பீ செவன் கிருஷ்ணன் சீட்டு பிடிக்கறானுமில்லே...''

''யாரு... உயரமா சுருட்டை முடி...? எதுக்கெடுத்தாலும் லத்தியால சொருகிடுவேம்பானே அவனு?''

''அவனேதான்... மாசம் இருநூறு ரூபா. இருபது மாசம்...''

''திரும்பி வருமா எல்லாம்?''

''போலீஸ்காரனாச்சே... பயப்படமாட்டானுங்க எல்லாரும்?''

அடிக்கடி பிடிபட்டு ஸ்டேஷனுக்கு வாடிக்கையாய் வருகிறவள் இவர்களைப் பார்த்தபடி ரிக்ஷாவில் போனாள்.

''இவளுக்கெல்லாம் ரிக்ஷா ஒரு கேடு... சரியான கிழவி.''

''இவகிட்ட இன்னமும் போறாங்களே அவங்களைச் சொல்லணும்,'' கோபாலுவின் கமெண்ட்.

இருவரும் சத்தம் வெளியே தளும்பாமல் சிரித்தார்கள்.

''கோபாலுண்ணே... அங்கப் பாருங்க... ஒரு பய லைட் இல்லாத வேகமா இறங்கி வர்றாப்ல... இந்தப் பக்கம் திரும்பினான்னா நமக்கு இன்னிக்கி போணி பண்ணிடுவான்.''

உச்ச வேகத்தில் சைக்கிள் கீழிறங்கி வந்து கொண்டிருந்தது. நான்கு கண்கள் சைக்கிளோடு பிரயாணம் செய்தன — நேராகத் திருப்பரங்குன்றம் சாலையில் போய் விட்டது.

''நேராய்ப் போய்ட்டானே...''

கோபாலு கணேசனை உற்சாகப்படுத்த வேண்டியதாயிற்று.

''விடுங்கண்ணே... ஊர்ல நமக்குக்கிடைக்காத ஆளா...?''

சொன்னது வீண் போகவில்லை. சரியாக ஐந்து நிமிடங்களிலேயே முதல் எலி, பொறிக்குள் சிக்கியது.

''ஸ்டாண்டு போட்டுட்டு இங்கவாடா... விசிலடிச்சுக் கூப்பிடறோம்... நீ பாட்டுக்குப் போய்ட்டே இருக்கியே.''

''இல்ல சார்'' என்றான் — சுண்டெலி; மீசை பயிராக வேண்டிய மேலுதட்டில் நாற்றுக்களே அரும்பியிருந்தன.

''என்ன 'நொள்ள சார்...' ஏண்டா லைட்டைப் போடல?''

''பல்ப் ஃப்யூஸ் சார்.''

''தெரியுதுல்ல ப்யூஸுன்னு... புதுசு போடறதுதானே... எல்லாருக்கும் தைரியம் போலீஸ்காரன் பிடிக்க மாட்டான்னு... ஒதுங்கி நில்லு...''

கோபாலுவிடம் கெஞ்சினான். ''சார், சார்... இந்தத் தடவை விட்டுடுங்க சார்.''

''போய் நில்லுடா முதல்ல... தாளி... நாம் பாட்டுக்கும் ஏதாவது பேசிறப் போறேன்.''

பொறிக்குள் சிக்கிய எலி கம்பி இடுக்குகள் வழியே வெளியில் போக முடியுமா என்று பார்த்தது; நீள மீசையால் மேல் ஜன்னல் உணர்ந்தது; திரும்பி ஓடி மரக்கதவில் மோதிக் கொண்டது; மறுபடி வெளிச்சம் கண்டு கம்பிகளை நோக்கி விரைந்து வந்தது; மூக்கு மட்டுமே வெளியில் துருத்த முடிந்தது. ஓய்வில்லாத போராட்டம்...

களைத்துப் போன போது பையனுக்கு உண்மை புலப்பட்டது.'' மாதக்கடைசியில் கேஸுக்காக அலைகிறார்கள் அவர்கள்.''

சைக்கிள் காரியரில் அமர்ந்து கொண்டான் அந்தப் பையன்.

தெரு நன்றாய் இருட்டியிருந்தது.

''இன்னொரு கேஸைப் பிடிச்சிட்டாப் போதுமில்ல... இன்னிக்கி கடையக்ளோஸ் பண்ணிரலாம்.''

''போதும்... ஆளு ஊர்ல அவனவன் இருந்திட்ட மாதிரியில்ல தெரியுது. ஒருத்தனாவது இவன மாதிரி வண்டி ஓட்டி வந்து மாட்டிக்கிட்டானா பாரு... அதோ அந்தப் பய புள்ள நம்மள எங்கிருந்தோ பாத்துப்புட்டு லைட் இல்லாத சைக்கிளை இறங்கி உருட்டிட்டுப் போறான். இருபதடி தள்ளிப் போனா திரும்ப வண்டில ஏறி உக்காந்துருவான்... இவன்தான் மூளை இல்லாம மாட்டிக்கிட்டான்.''

கோபாலு பையன் பக்கம் திரும்பினான்.

''ஏண்டா, ஒம் பேரென்ன?''

''ஜகதீஷ் சார்.''

''அதென்னடா ஜகதீஷ்?'' கோபாலுக்குத் தன் பெயர் அநாகரிகமாகத் தோன்றியது.

''அர்த்தமில்லாம ஏதேதோ பேர் வெக்கறாங்க இந்தக் காலத்துல... ஒன்ன வீட்டுல எப்படிக் கூப்பிடுறாங்க. தீசு தீசுன்னா?''

இரு கான்ஸ்டபிள்களும் சிரித்துக் கொண்டார்கள். எலிக்கு கூண்டு பத்திரமானது தான் — அதில் சுதந்திரம் இல்லை என்பதைத் தவிர; கம்பி இடுக்குகள் வழியே நுழைந்து உடலைத் தேடிப் புண்ணாக்க விழைகிற துடைப்பக் குச்சியும் கம்பியும் தவிர்க்க வியலாதது என்பதைத் தவிர...

''அய்யர் வீட்டுப் புள்ளயா நீ?''

''இல்லை. செட்டிமாரு!''




''செட்டியாரா?'' மாட்டிக் கொண்டவன் தன் ஜாதி என்றதும் உற்சாகம் கணேசனுக்கு.

''அப்பாரு என்ன பண்றாரு?''

''லாயரு... பேரு, சண்முக சுந்தரம்.''

கோபாலுவிற்குப் போர்க்களத்தில் பத்தடி பின்வாங்கிய மாதிரி இருந்தது. 'அப்பா லாயராமே....' கடுமையாய் பேசி விட்டுப் பின்னால் இப்படிச் சின்னப் பையனிடமும் குழைந்து போகும்படி நேர்ந்து

விட்ட தன் உத்தியோகத்தை எண்ணி நொந்து கொண்டான்.

''ஏம்பா தம்பி... பெரிய வீட்டுப் புள்ளையா இருக்கே... இப்படி லைட்டு இல்லாமயா வருவாங்க... சரி... சரி... இனிமேயாவது லைட்டைப் போட்டு வண்டிய ஓட்டு... என்ன... போய்ச் சேரு.''

எந்த வார்த்தை தன்னை விடுவித்தது என்று புரியாமல் தூக்கத்தில் நடப்பவன் போல் நடந்து சைக்கிளில் ஏறி மிதித்து அடுத்த தெருவில் சுழன்று திரும்பி மறைந்தான், ஜகதீஷ்.

இருவரும், அதே திசையைப் பார்த்த வண்ணம் பெருமூச்செறிந்தார்கள்.

எலிப்பொறி மறுபடி 'ஆ' வென்று வாய் பிளந்தபடி திறந்து, கிடந்தது. மசால் வடையோ, கருவாடோ, தேங்காய்ப் பத்தையோ எதுவானாலும் உள்ளே வந்து விழ வேண்டியது எலியின் விதி.

இந்த முறை மாட்டிக் கொண்டது கண்ணாடி அணிந்திருந்த பேண்ட் போட்டிருந்த டீசண்டான எலி.

''வண்டிய ஓரமா நிறுத்துப்பா.''

கேஸ் டயரியை எடுத்தான் கோபாலு.

''பேரென்னப்பா?''

''ஒரு நிமிஷம். உங்களுக்குக் கதிரேசன் தெரியுமில்ல?'' என்றான் புதிதாக மாட்டிக் கொண்ட ஆள்.

''ஊர்ல ஆயிரம் பேரு இருக்கானுங்க.''

''இல்ல... உங்களுக்குத் தெரிஞ்சிருக்கணும்... உங்க டிபார்ட்மெண்ட்தான்.''

கோபாலுக்குப் புரிந்தும், புரியாத நிலையில் இருப்பது போல நடித்தான். 'இவனும் நழுவி விடப் பார்க்கிறான்.'

''விளக்கமாச் சொல்லுங்க...''

''பீ டுவுல இருக்காரே கதிரேசன்.''

''இருக்காரு... அவருக்குத் தூரத்துச் சொந்தமா நீங்க... சட்டத்தை மீறிட்டு அவரு பேரைச் சொல்லித் தலையைச் சுத்தி மூக்கைத் தொடுவீங்க... நாங்களும் விட்டுரணும் இல்ல?'' கோபாலுவிற்குக் கோபத்தில் மூச்சிரைத்தது.

''கோபப்படாதீங்க சார்... அவரு ஒண்ணும் தூரத்துச் சொந்தமில்லே.''

''ஏன் சொந்தமேயில்லேயா அவரு?''

''அப்படியில்லே... அவரு என் சொந்த அண்ணன். அவ்வளவுதான்... பீடுவுல இன்ஸ்பெக்டர்.''

கடாமீசையும் ஆறடி உயரமும் ஞாபகத்திற்கு வர கோபாலு டயரியை மூடினான்.

''கதிரேசன் தம்பியா நீங்க.''

கணேசன் தொடர்ந்தான்: ''எனக்கும் முதல்ல குளப்பமா இருந்துச்சு... எங்கியோ பார்த்த மாதிரி இருக்கேன்னு... அவரு தம்பியா நீங்க... அவரு தொழிலுக்கு ஏத்த மாதிரி பெரிசா மீசை வெச்சிருக்காரு... நீங்க சுருக்கமா நறுக்கா வெச்சிருக்கீங்க... நல்லதாப் போச்சு... அண்ணன்கிட்டே பீ செவன் கோபாலும் கணேசனும் விசாரிச்சோம்னு சொல்லுங்க... எங்களைத் தெரியும் நல்லா.''

''சொல்றேன்... போயிட்டுவரேன்'' என்றபடி 'டீசண்ட் எலி' கிளம்பினான்.

''பாத்துப் போங்க... லைட்டு வேற இல்ல... எவனாவது இடிச்சிடப் போறான்.''

''சரி... பாப்போம்.''

சைக்கிள் கண்ணிலிருந்து மறைந்தது. இருவருக்கும் ஏமாற்றம் நிரம்பி வழிந்தது.

''இன்னிக்கி யாரு முகத்துல முளிச்சோமோ... மாட்டினது ரெண்டுமே பறந்து போயிருச்சேண்ணே.''

கோபாலு மணிக்கட்டை வெளிச்சத்தில் சாய்த்தான்.

''கணேசண்ணே... மணி ஏழுதானே ஆகுது... நேரம் இருக்குல்ல இன்னும். இனி மேலயும் வராமயா இருக்கப் போறாங்க... அப்படியே வந்தாலும் நமக்கு வசதியா — பெரிய ஆளுகளத் தெரியாதவனுங்க — வராமயா இருக்கப் போறாங்க.''

''அதுவும் சரிதான்...''

பொறுத்திருந்தார்கள்.

உலோகத்தனமான பின்னணிப் புலம்பலில் ஏரியல் துடித்துக் கொண்டிருக்க பீ ஒன் இன்ஸ்பெக்டர் புல்லட்டில் கடந்து போனார்.

இருவரும் விறைப்புடன் சல்யூட் அடித்தார்கள்.

நடமாட்டம் குறையத் தொடங்கிய சாலை— — சைக்கிளின் பின்புறம் சொருகிய லத்திக் கம்பும், முன்புற விளக்கின் மேல் மாட்டியிருந்த தொப்பியுமாய் — — அவர்கள் இருவரும் காத்திருக்கிறார்கள்.



''கூட்டத்துக்கு வந்த பேச்சாளர் ஏன் பேசாமல் திரும்பிட்டார்?''

''புதுசா ரோடு போடக் கருங்கல் ஜல்லி கொட்டி வச்சிருக்காங்கல்ல.... அதெல்லாம் தீர்ந்த பிறகுதான் பேச வருவாராம்!''

— ஷி

# சின்னச் சின்ன கனவுகள்

சுபா

6

“இதான் பரிமளா'' என்றான் பாண்டியன்.

இந்திரா அந்தப் பெண்ணை ஏறிட்டுப் பார்த்துச் சிரித்தாள். பரிமளாவின் முகத்தில் பால் தெரிந்தது. கள்ளம், கபடம் என்று யாராவது அவளிடம் வார்த்தைகளை இறைத்து விட்டால், ''என்ன அர்த்தம்.'' என்று கேட்பாள் போலத் தெரிந்தாள். பள்ளிக்கூடம்சென்றநாட்களில் பரிமளா நிச்சயம் 'ஒல்லிப் பிச்சான்' என்ற அடைமொழியைத் தாங்கியிருப்பாள். சிரித்தாள். அழகான பற்கள்.

சிறிய உதடுகள். சிறிய மூக்கு. கொஞ்சம் ஓவல் ஷேப்பில் முகம். வட்டமாய்ப் பொட்டு வைத்திருந்தாள். காப்பிப் பொடி கலரில் ஸாரி அணிந்திருந்தாள். அதில் வெள்ளைக் கட்டம். காப்பிப் பொடி கலரில் ரவிக்கை. கிராமம், கிராமமாக இரை தேடும் காமிராக் கண்ணில் இந்தப் பரிமளா இடறியிருந்தால் இந்நேரம் ஒரு கதாநாயகி அந்தஸ்திற்கு உயர்த்தப்பட்டு 35 எம். எம்.மில் அவளது துடிப்புக்களைக் காட்டியிருப்பாள்.

''பரிமளா... இந்தம்மா ஊருக்குப் புதுசு. நம்ப ஃபாக்டரியில் இன்னிக்கு வேலைல சேர்றாங்க. கூடமாட இருந்து கத்துக் குடு.''

''சரிண்ணே'' என்றாள் பரிமளா. 'கிணு, கிணு' என்று வெள்ளி மணிகள் நாவசைத்த மாதிரி இருந்தது குரல்.

''நீங்க இதுகிட்ட வேலையெல்லாம் கத்துக்கலாம். பேச்சுதான் கொஞ்சம் ஜாஸ்தி.''

''வந்தவுடனே அக்காவைப் பயமுறுத்தாதீங்கண்ணே!''

''தெரியும். நீங்க சாதுப்பூனைதான். போட்டேன்னு பாரு. அவங்ககிட்டே சளசளன்னு பேசாமல் வேலையை மட்டும் சொல்லிக் குடு'' என்றான் பாண்டியன். குரலில் ஒரு சந்தோஷக்கேலி தெரிந்தது.

''பேசினா என்ன செய்வீங்களாம். அவுங்க எங்க அக்கா மாதிரி. நாங்க ஒண்ணுக்கொண்ணு என்ன வேணா பேசிக்கிடுவோம்.''

''ஏய்... வேணாம்... சொல்லிடுவேன்... அன்னிக்கு நீ சினிமாக் கொட்டாய்ல...''

பரிமளா அவனை மேலே பேசவிடாமல் கையிலிருந்த தூக்கால் லேசாகத் தட்ட, தூக்கு திறந்து கொண்டு உள்ளிருந்த மோர் சாதம் முழுக்கப் பாண்டியன் சட்டையை நனைக்க...

'களுக்' என்று இந்திரா சிரித்துக் கொண்டாள். ஃபாக்டரியில் முதல் நாள் அனுபவம் இந்த நான்கு நாட்களாக அவளைத் துரத்திக் கொண்டே இருக்கிறது. பரிமளா சினிமாக் கொட்டகையில் என்ன செய்தாள் என்று தெரியாவிட்டாலுங்கூட, பரிமளா சாதத்தைக் கொட்டி விட்டதற்காகப் பதறியதும், பாண்டியன் வெகு சாதாரணமாக அதை எடுத்துக் கொண்டு, சட்டையைக் கழுவிக் கொண்டதும், 'பாலாபிஷேகம், தேனபிஷேகமெல்லாம் தெரியும். மோருஞ்சோறு அபிஷேகம் கேள்விப்பட்டதில்லே..... இப்பப் பார்க்கிறேன்' என்று விளையாட்டாய்ச் சொன்னதும், நினைக்க நினைக்கப் புன்முறுவல்களைக் கொண்டு

கொட்டுகிறது.

இன்றைக்காவது பரிமளாவிடம் சினிமாத் கொட்டகை விஷயத்தைக் கேட்டுவிட வேண்டும். 'சினிமா கொட்டாய்' என்றதும் பரிமளா முகம் வெட்கக் காடாக மாறிப் போனதே! என்ன விஷயமாய் இருக்கும்? சுறுசுறுப்பாக நடந்தாள். ஃபாக்டரி காம்பவுண்ட் சுவர் கூடவே வந்தது. சுவர் அப்படி ஒன்றும் உயரம் இல்லை. வெளியிலிருந்து பார்த்தால் சுவருக்கு அப்பால் இருந்த பிரதேசம் தெரிந்தது. முதலாளியின் காம்பவுண்டை விட இந்தக் காம்பவுண்ட் பெரியது. கேட் அருகே துவங்கிய தார்ச் சாலை தாவரப் பச்சைகளுக்கு இடையில் கறுப்பாக வளைந்து நெளிந்து, ஃபாக்டரி வரை மூச்சிரைக்காமல் ஓடியது. கேட்டருகே மரக்காபின் அமைக்கப்பட்டு இங்கேயும் ஒரு காவலாளி இருந்தான். இளைஞன். பீடி பிடிக்காமல் புத்தகங்கள் படித்தான். அவனது காக்கி உடைகளுக்கும், நெற்றியின் திருநீறுக்கும் முரண்பாடு தெரிய, இந்திரா அந்தக் காம்பவுண்டில் நுழைந்தாள். நான்கு நாள் பரிச்சயத்தில் லேசாகச் சிரித்தான்.

முதல்நாள் அந்தக் காம்பவுண்டில் நுழைந்தபோது இருந்த படபடப்பு இப்போது இல்லை. பாண்டியன் உடன் வராமல் போயிருந்தால் கூட வேலை கிடைத்திருக்கும் போலத்தான் தோன்றியது. கையில் ஆயுதத்தை எடுத்துக் கொண்டு உள்ளே நுழைந்து விட்ட அம்மனுக்கு வழிவிடுவதுபோல அவளுக்காக எல்லாக் கதவுகளும் திறந்தன. பேர் மட்டும் கேட்டார்கள். சொன்னாள். கையெழுத்துப் போடச் சொன்னார்கள். போட்டாள். அவளுக்கு என்று ஓர் எண்ணைக் கொடுத்தார்கள். இதுதான் ஃபாக்டரியில் அவளுடைய பெயர் என்றார்கள். 'சரி' என்றாள்.

காலையில் ஏழு மணிக்கே ஃபாக்டரியில் இருக்க வேண்டும் என்று சட்டம். சூரியன் எழுவதற்கு முன் எழுந்து, இரவுப் பாத்திரங்களைத் தேய்த்து, துணிகளைத் தோய்த்து, காப்பி போட்டு அண்ணனை எழுப்பிக் கொடுத்து, சசிக்கு ஹார்லிக்ஸ் கரைத்துக் கொடுத்து, நந்துவை எழுப்பி ஸ்கூலுக்குத் தயாராகச் சொல்லி, பழையதைக் கரைத்துக் குடித்து, மதியத்திற்கு என்று ஒரு தூக்கில் அவசர அவசரமாக வடித்த முக்கால் வேக்காட்டுச் சாதத்தில் எதையோ ஒன்றை ஊற்றிக் கலக்கிக் கொண்டு —

வீட்டில் வேலை கொஞ்சம் அதிகம்தான். அண்ணியின் முகத்தில் சிடுசிடுப்பும் கொஞ்சம் அதிகம்தான். இருந்தாலும், 'பாரமாக இருக்கிறோமே, பாரமாக இருக்கிறோமே,' என்று அவளைப் பூமியோடு அழுத்திய குற்ற உணர்ச்சியை இந்த நான்கு நாட்களாகக் காணவில்லை.

எவ்வளவு வேலைகள் செய்தாலும் களைப்புத் தெரிவதில்லை. 'ஆறரை மணிக்கே வாசல் புறம் வந்து, நீளநீளமான காலை நிழல்களை உருவாக்கும் சூரியனோடு சேர்ந்து நடக்கத் தொடங்கி, இதோ ஃபாக்டரி!

இரவு பெய்த மழையில் குளித்த தார்ச் சாலை, இன்னும் துவட்டிக் கொள்ளாமல் இருக்க, ஒரு கம்பளிப்பூச்சி நிதானமாக ஊர்ந்தது. இருபுறங்களிலும் ஏதேதோ செடிகள். காம்பவுண்ட் சுவர் ஓரமாக நிறைய மரங்கள் பச்சைப் போர்வை போர்த்தி இருந்தன. கையில் பித்தளை, அலுமினியத் தூக்குகளுடன் எல்லா வயதிலும் ஓடினார்கள். பசி, பசி! வேலை, வேலை! பணம், பணம்!

இந்திராவைச் சாலையை ஒட்டி வளர்ந்திருந்த நாய்க்கடுகுச் செடி கவர்ந்தது. தயங்கினாள். பறித்துக் கொண்டு போய்க் கடுகை உதிர்த்து, சட்டினி அரைத்தால் ஜெயபால் சந்தோஷப்படுவானே என்று ஓரத்தில் நினைத்து, சாலையிலிருந்து விலகினாள். வீட்டுக்குப் போகும்போது பறிக்கலாம் என்றால் இருட்டிவிடும். பாண்டியன் வேறு வீடு வரை அவளைக் கொண்டு விடக் காத்திருப்பான். அவனை மேலும் காக்க வைப்பதில் மனம் சம்மதப்படாமல், மெல்லிய கொத்தவரை சைஸில் இருந்த காய்களைப் பறிக்கத் தொடங்கிய போது அந்தச் சிரிப்பொலி மிக அருகில் கேட்டது. நிச்சயம் ஒரு பெண்ணுடையது. இந்திரா திடுக்கிட்டாள். நிமிர்வதற்குள் சிரிப்புத் தாளத்திற்குக் கீதமாய் ஓர் ஆண் குரல் கேட்க, மனத்தில் பரவிய லேசான திகிலுடன், இயல்பான மனித ஆவலுடன் தலையைத் தூக்கினாள். எங்கே என்று தெரியவில்லை.

''நான் தொட்டா பயம்மா இருக்கா?''

''வெக்கமா இருக்கு.''

அந்தச் சின்ன சம்பாஷணை அவளுக்கு, கலைந்து போன தனது பழைய நாட்களை நினைவுப்படுத்த இந்திரா இன்னும் கொஞ்சம் நெருங்கினாள்.

''வேண்டாங்க... ம்ஹ'ஹ'உம் வேணாம்...''

''ஏய்... கழுதை... வேணாம், வேணாம்னு சொல்லிட்டிருந்தே, அவ்வளவுதான். நான் ஒரேயடியாப் போய்டுவேன்.''

''ம்ம்... எனக்கு வெக்கமா இருக்குங்க.''



''கட்டிக்கப்போறவன்கிட்ட என்ன வெக்கம்?''

''கட்டிக்கிட்டப்புறம் பாருங்க... நீங்க வெக்கப் படப் போறீங்க...''

''என்னது, என்னது? ஏய் போக்கிரி.''

இப்போது அவன் முதுகு தெரிந்தது. அகலமான முதுகு. குனிந்திருந்தான். 'யார் அது' என்று இந்திரா அவளுக்குத் தெரிந்த முகங்களில் அடையாளம் தேடுகையில் அந்தப் பெண்ணின் புடைவைத் தலைப்பு தெரிந்தது. அவனது தோளில் முகம் புதைத்திருக்க, உச்சந்தலை எண்ணெயில் சூரியக் கதிர்கள் பட்டு மினுமினு. அவளது கண்கள் மூடியிருந்தன. பட்டென்று நிமிர்ந்து அவனைப் பார்த்தாள்.

''என்னை எப்பக் கட்டிக்கப் போறீங்க. சொல்லுங்க?'' என்றாள். சில விநாடிகளுக்கு முன் கேட்ட போது அந்தக் குரலில் இருந்த மயக்கம் தொலைந்து போய் ஒரு சின்ன பிடிவாதம் மேலே மிதந்தது தெரிந்தது.

'அட பரிமளா? இந்த விவகாரத்தை என்னிடம் சொல்லவேயில்லையே' என்று நினைத்துக் கொண்டாள். அவளை வெற்றி கொண்டவன் யார் என்று அறிந்து கொள்வதில் இப்போது ஆவல் அதிகரிக்க, இந்திரா சலசலப்பை உண்டாக்காமல் இன்னும் சிறிது நெருங்கினாள்.

''சீட்டுப் போட்டிருக்கேனில்ல?'', என்றது ஆண் குரல். அவளுக்குப் பரிச்சயமான குரல் போலத்தான் இருந்தாலும் சட்டென்று ஆளைப் பொருத்த முடியவில்லை. பாண்டியனா? ச்சே. இருக்காது. பரிமளா தான் அவனை 'அண்ணே' 'அண்ணே' என்கிறாளே. மேலும் பாண்டியன் தலைமுடி குப்பென்று கிளம்பியிருக்கும், ஒழுங்கில்லாத முட்புதர் போல!

''என்ன சீட்டு?''

''நகைச் சீட்டு பரிமளா! முடிய இன்னும் ஒரு மாசந்தான் இருக்கு. முடிஞ்சதும் தாலியா வாங்கி உன் கழுத்தில கட்டிடறேன். தாலி கட்டின ராத்திரியே...''

''சொல்ல வேணாம். என்ன சொல்லுவீங்கன்னு எனக்குத் தெரியும். எனக்குத் தங்கம் வேணாங்க. நீங்கதான் வேணும். மஞ்சளைக் கோத்துத் தாலி கட்டக் கூடாதா?''

''ஏய்... எதுக்கு இப்ப கண்ணைக் கசக்கறே? ஒன் ஒடம்பு முழுக்கத் தங்கத்தால எழைச்சிப் பார்க்கணும்னு எனக்கு ஆசை கண்ணம்மா. என்னால முடியாது. அதனால தாலியாவது தங்கத்தில வாங்கி... என்ன எழுந்துட்டே...?''

பரிமளா திமர் என்றுதான் இந்திராவைப் பார்த்தாள். கண்கள் அகல விரிய, முகத்தில் திடுதிப்பென்று பயம் பரவ, ''அக்கா... அக்கா...'' என்று மெல்லிய குரலில் காற்றைத் துளைக்கப் பார்த்துத் தோற்றுப் போனாள்.

நீர் மட்டத்திலிருந்து மேல் எழும் மீன் கொத்தி போல் எழுந்து, இந்திரா வாயெடுத்து அழைப்பதற்குள், செடிகளை இடறி, மரத்தில் மோதப் பார்த்து விலகிச் சிட்டுக்குருவி நினுசில் ஓடிப் போனாள்.

அவன் திரும்பிப் பார்க்க, தங்கராஜ். ஃபாக்டரி சூப்பர்வைசர்களில் ஒருவன். இந்திராவைப்



பார்த்து, திருடுகையில் அகப்பட்டவன் முழியுடன் லேசாகச் சிரித்துவிட்டு, உதட்டில் ஒரு விசில் மெட்டைப் பொருத்திக்கொண்டு, இரண்டு கைகளையும் பாக்கெட்டில் விட்டுக் கொண்டு ஆகாயம் பார்த்து நடந்தான்.

பாண்டியன் இல்லை என்று நிச்சயமாய்த் தெரிந்தவுடன் இந்திராவிற்கு ஓர் ஆறுதலாய்க் கூட இருந்தது.

இந்திரா பக்கத்தில் மலைபோல் குவிந்திருந்த மரக்குச்சிகளைப் பார்த்தாள். ஒரு மர ஃப்ரேமை எடுத்துக் கொண்டு அந்தக் குச்சிகளை எடுத்து அடுக்கத் தொடங்கினாள். வேலை ஒன்றும் கம்ப வித்தை இல்லை. மர ஃப்ரேம்களில் வரிசையாய் ஐம்பத்திரண்டு தீக்குச்சிகளை அடுக்கித் தர வேண்டும். கைகள் எவ்வளவு ஃப்ரேம்களை அடுக்கி முடிக்கின்றனவோ அதற்கு ஏற்றாற்போல கூலி. பரிமளாவின் கை கரெண்டால் ஓடுகிறதா என்று தெரியவில்லை. ஃப்ரேமின் இந்த முனைக்கும், அந்த முனைக்கும் 'விர், விர்' என்று நீரில் நீந்தும் வஞ்சிர மீன் போல் பாய்கிறது. இரண்டு முறை பாய்ந்தால் ஃப்ரேமில் தீக்குச்சிகள் ஃபுல் வரிசையில் ஆஜராகி அடுத்த கட்ட வேலைக்குத் தயாராகி விடுகின்றன.

"நீ பரவாயில்லே பரிமளா!... ஒரு நாளைக்கு பத்து ரூபா பாத்துடறே... என்னால முடியலே. பாரு, ஆறு ரூபாதான் என் கணக்கில ஏறுது" என்றாள் இந்திரா பக்கத்தில் அடுக்கிக் கொண்டிருந்த பரிமளாவிடம்.

பரிமளா ஏறிட்டுப் பார்த்தாள். முகத்தில் லேசான வெட்கம் இருந்தது. காலையில் அகப்பட்டதால் ஏற்பட்ட வெட்கம்.

## வந்ததன் காரணம்

கே. ஏ. அப்பாஸும் இன்னும் சிலரும் பொதுத் தொண்டுக்காக நிதி திரட்டினர். நகரத்தில் உள்ள முக்கியமான மனிதர்களைப் பார்த்து விட்டு மாகாணக் கவர்னரிடம் சென்றார்கள். கவர்னர் மால்கம் ஹெய்லி. "உங்களுக்கு ஆங்கிலேயர்களைக் கண்டால் பிடிக்கவில்லை. இதற்கு மட்டும் என்னிடம் வரலாமா?" என்று அவர் கிண்டலாகக் கேட்டார்.

இளைஞர் கூட்டம் இதைக் கேட்டுத் திகைத்தது. ஆனால், அப்பாஸ் உடனே, "நாங்கள் உங்களிடம் இனாம் பெற வரவில்லை. நீங்கள் எங்களிடமிருந்து பெறும் பணத்தில் ஒரு பகுதியைத் திரும்பப் பெறத்தான் வந்தோம்" என்று கம்பீரமாகச் சொன்னார். கவர்னர் மறு வார்த்தை பேசாமல் நூறுரூபாய் கொடுத்தார்!

— எஸ். முகம்மது யூசுப்.



"நீ ஒண்ணுக்கா... இன்னும் நாலு நாள் கழிஞ்சா என்னை நீ தூக்கிச் சாப்பிட்டுடுவே" என்றாள்.

"எப்படி?"

"நீ அடுக்கறதைப் பாக்கறப்பவே தெரியுது இல்லே. வேலை பழகிட்டே அக்கா. ஒவ்வொருத்தர் வந்த புதுசுல ரெண்டு, மூணு கூட சம்பாரிக்க மாட்டாங்க."

"அப்படியா?"

"போகப் போகப் பாருக்கா. என்னை நீ ஏப்பம் வுடப் போறியா இல்லியான்னு."

"என்னால முடியாதும்மா."

"ஏங்கா?" என்றாள் வெகுளித்தனமாகப் பரிமளா.

"எனக்கு வயசேறிப் போய்டிச்சி. நீ சிறிசு. ஆன்னா ஓட்டம். ஊன்னா ஓட்டம். காலைல பாக்கலே."

"போக்கா. குறும்பு."

"எத்தனை நாளாப் பழக்கம்?"

பரிமளா கொஞ்சம் தயங்கி, முகம் சிவந்து, "ரெண்டு வருஷம்" என்றாள்.

"அம்மாடியோவ். ரெண்டு வருஷமாவா இப்படியே இருக்கீங்க. சட், புட்டுனு ஒரு தாலியை வாங்கிக்கிட்டுச் சேர்ந்துடுங்க.." என்றாள் இந்திரா தலையை லேசாகச் சாய்த்துக் கொண்டு.

"அதான் நகைச்சீட்டு கட்றாராமில்ல. இன்னும் ஒரே மாசந்தாங்கா."

"ரொம்பத்தான் அவசரம் போல இருக்கு."

"ஏங்கா. இப்படிச் சொன்னா அப்படி வர்றே. அப்படிச் சொன்னா இப்படி வர்றே"

"கோவிச்சிக்காதே தாயே! வேடிக்கைக்குச் சொன்னேன். ஜோடிப் பொருத்தம் நல்லாத்தான் இருக்கு.

"நெசம்மாவா அக்கா?"

"நெஜமாத்தாண்டி... இதான் உங்க பாண்டிய அண்ணன் சொன்ன சினிமாக் கொட்டா விவகாரமா?"

பரிமளா பதில் சொல்லாமல் தலையைக் குனிந்தாள். உடலெங்கும் மின் அதிர்வுகள் ஓடினமாதிரி உணர்ந்து, "ஆமாங்கா! அண்ணன் பாத்திருச்சி" என்றாள்.

"வெக்கத்தைப் பாரு. ஓவராப் போயிடலையே...?"

அவசர அவசரமாகப் பரிமளா தலையை ஆட்டி மறுப்புத் தெரிவிக்கையில், தடதடவென்று சப்தம் கேட்கத் திடுக்கிட்டு நிமிர்ந்தார்கள்.

அந்த 'ப' வடிவ முற்றத்தில் வேலை செய்து கொண்டிருந்த அத்தனை பேர்களும் நிமிர, அங்கே இனம் புரியாத கூச்சல்கள்.

இந்திராவுக்கு அருகில் அமர்ந்திருந்த ஒரு சிறுவன் — நந்தகுமார் வயதிருக்கும், எழுந்து, இந்திராவிற்குப் பக்கத்தில் அம்பாரமாய்க் குவித்து வைத்திருந்த குச்சிகளை இடறி, மத்தாப்புச் சிதறல்களாய் அவற்றைச் சிதறடித்துவிட்டு, ஒருமுறை தடுமாறி விழுந்து, முழங்கால் சில்லில் பளிச்சென்று வெளிப்பட்ட ரத்தத்துடன் எங்கோ ஓட, முற்றத்தில் கூச்சல் அதிகமாகி விட்டது.

(தொடரும்)

# கவனித்தீர்களா—இந்த ஸீஸனில் சுனில் கவாஸ்கர் எப்படி, இளமை மிகுந்து விளங்குகிறார்?



சேப்பாக்கம் '84



அடிலெய்டு-ஆஸ்திரேலியா '85

## "நான் கோத்ரெஜ் பவுடர் ஹேர் டைய் உபயோகிக்கத் தொடங்கியிருக்கிறேன்"

சுனில் கவாஸ்கர்

சுனில் கவாஸ்கர் முன்னிலும் இளமையாகத் தென்படுவதாக திடீரென உங்களுக்குத் தோன்றினால், நீங்கள் நினைப்பது சரியே. கேசச் சாயம் தீட்டிக் கொள்ளத் தீர்மானித்ததுமே சுனில் தேர்ந்தெடுத்தது கோத்ரெஜ் பவுடர் ஹேர் டைய்.

"காரணம், இது பாதுகாப்பானது, தானாகவே பரவிக்கொள்வது. ஆகவே அப்ளை பண்ணிக்கொள்ள இலகு. கேசமுழுதுமே இது சரிசமமாகப் பரவியமையும். அதுவுமின்றி, விரைவிலே. நான் என்னவோ, எனது நேரத்தை வெகுவாக மைதானத்தில்தான் செலவிட விரும்புவேன்".

சுனில் அறிவார்: இயற்கையான தோற்றம் தருகிறது கோத்ரெஜ் பவுடர் ஹேர் டைய்.

"என் கேசம் எவ்வளவு முடியுமோ அவ்வளவு இயற்கையாக விளங்க வேண்டும்—இதைத்தான் விரும்புவேன்: என்ன இருந்தாலும் அதிக இளமையோடு நான் தோற்றமளிக்க வேண்டும்—இயல்பாக".

இப்போது
25% அதிகம்
- புதிய
பேக்கில்







உங்களால் யூகிக்கவே முடியாது...
அவர் சொல்லும் வரை...
இவ்வளவு இயற்கையான தோற்றம்.

Mudra: B: GHD: 2679 TM




"மாமா! இந்த மாசத்துச் சம்பளம்!"

சுபா நீட்டியதும், அதற்கே காத்திருந்தது போல, மாமனார் 'லபக்'கெனக் கவரைக் கவ்விக் கொண்டார்..

மூக்கின் விளிம்பைத் தொட்ட கண்ணாடியின் வழியாகக் கீழ்ப் பார்வை பார்த்துக் கொண்டே, 'சரக், சரக்'கென நோட்டுக்களை எண்ணினார். திரும்பவும் இரண்டு முறை எண்ணினார்...

"பத்து ரூபா குறையுதே!"

"துர்க்கா பூஜைக்கு எல்லார்கிட்டேயும் பத்து ரூபா வசூல் பண்றாங்க. அதான் நானும் குடுத்தேன்!" இவள் தயங்கித் தயங்கிச் சொல்ல....

"இதெல்லாம் அனாவசியம்! குடும்பத்துல ஆயிரம் செலவு!"

"எல்லாரும் தந்து. நான் மட்டும் தரலைன்னா மரியாதை இல்லை... அதான்...!"

"ஓஹோ... மரியாதை எதுன்னு எங்களுக்குச் சொல்லித் தர்றியாக்கும்... சம்பாதிக்க, செலவு நடத்தறோமேங்கிற திமிர்..!"

"அய்யோ, நான் அதுக்கு..."

"விருட்டென்று வெளியே வந்தாள் கடைசி நாத்தனார். அவளது எலிவால் முடி ஆக்ரோஷத்தில் ஆட,

"ஏன் அண்ணி அப்பாவை எதிர்த்துப் பேசறே?"

"நான் எதுவுமே பேசலையே வசந்தி!"

"உன் பணத்தை நம்பி நாங்க இருக்கோம்னுதானே இந்த ஆட்டம் ஆடறே! அப்பாவோட பென்ஷன் இருக்கு எங்களுக்கு!' கஞ்சியோ, கூழோ அதுல நாங்க சமாளிப்போம்... உன் தயவில்லாமல் எங்களால் வாழ முடியும்!"

மாமியார் வெளியே வந்து அவள் பங்குக்கு ஆரம்பிக்க,

மாமியார் ஒரு தனி ரகம்...

உரத்துப் பேச மாட்டாள். ஓசைப்படாமல் சொல்லும் ரகம். 'நாசமாப் போக!' என்பதைக் கூட மென்மையாகத்தான் சொல்லுவாள்.

சுத்தமான அஹிம்சாவாதி!

அதற்கு மேல் அங்கு நிற்கப் பிடிக்காத சுபா, விருட்டென்று உள்ளே நுழைந்தாள்...

தீனமான முனகல் காதைத் தொட்டது.

ஓரிரு நிமிடங்கள் ரமணியை மறந்து போனது நினைவுக்கு வர, குற்ற உணர்வு நெஞ்சைக் குத்தியது.

திரும்பிப் பார்த்தாள். கட்டிலில் அவள் கணவன் ரமணி. ஒரு பக்கம் செயலிழந்த நிலையில் நாக்குக் கூடப் புரள முடியாமல் கிடக்கும் ரமணி.

மெல்ல நடந்து, கட்டிலில் போய் உட்கார்ந்து கொண்டாள். அவன் கேசத்தைக் கைகளால் தடவித் தந்தாள். நெஞ்சை அடைத்துக் கொண்டது. அவள் தலையில் அந்தத் தெய்வம் பெரிய பாறுங்கல்லைப் போட்ட அந்த ஏப்ரல் 14-ந்தேதி. தமிழ் வருடப் பிறப்பு நாளை மறக்கவா முடியும்...?

"என்னங்க, மணி ஏழாச்சு! இன்னு மென்ன தூக்கம்? எழுந்திருச்சுப் பல் தேய்ங்க!"

# தேவிபாலா

கண்களை விழித்ததும் ரமணி கைகளைத் தேய்த்துப் பிரித்து, அதன் மேல் முதல் பார்வையைப் பதிய விடுவது வழக்கம்!

இடது கையை எடுத்து, வலக்கையை உயர்த்த அதில் உணர்ச்சியே இல்லை. தன் உடலுக்கே சம்பந்தமில்லாதது போல ஜில் விட்ட நிலையில் ஓர் ஈரத் துணி போல் அது தனியாகத் தொங்க... கால்களை அசைக்க முயற்சி செய்த போது, வலது கால் இருக்கு மிடத்தில் உணர்வேயில்லை...

மிரண்டு போனான் ரமணி!

சுபாவிடம் ஏதோ சொல்ல முயற்சி செய்த போது, நாக்கு எழும்பவில்லை. ஒரு பக்கம் முகப்பகுதி விநோதமான கனத்துடன் நிற்க, முயற்சியில் ஈடுபட்ட அவன் வாய்ப் பகுதி தோல்வியைக் கண்டு துவள, அதன் கோணல் சுபாவை நிலைகுலைய வைத்தது.

சற்று நேரத்தில் டாக்டர் ஜெகதீசன் தமது பியட்டில் வந்து இறங்கினார்.

பிடிவாதமாக ஒரு மணி நேரம் சிகிச்சையைப் பிரயோகித்தும் மருத்துவம் கைவிரிக்க, உதட்டுச் சுழிப்போடு வெளிப் பட்டார்.

"என்ன டாக்டர் அவருக்கு?"

"உன் புருஷனா? சாரிம்மா, பெராலிடிக் அட்டாக் வந்திருக்கு... வலது பக்கம் விழுந் தாச்சு..."

சுபா போட்ட கூச்சலில், அந்த அவென்யூவே கிடுகிடுத்துப் போனது.

பிறகென்ன?

பெரிய, பெரிய நர்ஸிங் ஹோம்களில் சேர்க்கப்பட்டு, ஆயுர்வேதம் தொட்டு, மின்சாரம் வரை சகல விஞ்ஞானங்களையும் உபயோகித்தும், அத்தனை மருத்துவத்துக்கும் 'பெப்பே' காட்டியது ரமணியின் பக்க வாதம்.

ரமணியின் அலுவலகம் வீட்டில் கூடியது.

"சில விஷயங்களை நாங்க தீர்மானிக்கணும்!"

"சொல்லுங்க!" ரமணியின் அப்பா முன் வந்தார்.

"அவரால தன் உத்தியோகத்தை இனி தொடர இயலாது. அதனாலே..."

அப்பா அவசரப்பட்டார். "என் டாட்டர் படிச்சிட்டு வேலை இல்லாம இருக்கா... அவளுக்கு ஏற்பாடு பண்ண முடியுமா இந்த வேலையை?"

"ஏன் அவரோட மனைவி இல்லையா?"

"குடும்பத்துல யாராயிருந்தா என்ன? எங்க வசந்தி கிராஜுவேட்!"

"ஆனா சட்டத்துல அதுக்கு இடமில்லை. நாமினி அவங்க மனைவிதான். மிஸஸ் ரமணிக்குத்தான் அந்த உத்தியோகம் தர முடியும். அவரோட ஸேவிங்ஸை அவங்க பேர்ல மாத்திடறோம்."

சுபா குலுங்குக்குலுங்கி அழுதாள். அவள் கேட்டாளா இதை? ராஜா போல் கம்பீரமாக ரமணி போய்வர, வாசலில் நின்று 'டாட்டா' சொல்லும் சுபாவுக்கு இந்த நிலை தேவை தானா?

ஆயிற்று!

சுபாவும் வேலைக்குப் போகத் தொடங்கி ஒரு வருடம் போல முடிந்து விட்டது. ரமணியைப்போலவே, வாங்கும்சம்பளத்தை அப்படியே மாமனாரிடம் கொடுத்து விடுகிறாள்.

வெளியே எட்டு மணி நேரம் உழைத்தது போக, வீட்டிலும் வேலைச் சுமை. மாமியாருக்கு நின்றால் கால்வலி, நிமிர்ந்தால் வாயுப் பிடிப்பு! அவள்து வியாதிக்குப் பக்கவாத்தியம் சேர்க்கும் வாயாடி வசந்தி!

காலை நாலு மணிக்குத் தொடங்கும் சுபாவின் நாட்கள், இரவு பதினொன்றுக்குக் கூட முடிவதில்லை...

ஆ... அப்படியே வியர்வை சொட்ட இரவைத் தொட்டு விடும் நாட்களில் மீதி நேரம்தான் என்ன உற்சாகம்?

"ரொம்ப வேலையாடா? நான் காலைப் பிடிச்சு விடட்டுமா? தைலம் போட்டு நெத்தியை உருவி விடட்டுமா?" கேட்க வேண்டிய ரமணி, பேச்சு கூட இல்லாமல் இவள் படுக்கைக்கு வரும் வரை பேந்தப்

## அருள்வாக்கு



நாம் தினம் தினமும் உபயோகப் படுத்துகிற வார்த்தைகளையே கவிகளும் உபயோகப்படுத்துகிறார்கள். ஆனாலும் நம்முடைய பேச்சிலே கிடைக்காத அலாதியான நயம் அவர்களுடைய எழுத்திலே உண்டாகி விடுகிறது. நவ ரஸங்களிலும் உயர்ந்த பக்தி பாவங்களிலும் உத்தமமான எண்ணங்களிலும் நம்மைக் கொண்டு போய்ச் சொருகி ஆனந்தத்தை உண்டாக்குகிற சக்தி கவிகளுக்கு இருக்கிறது. அலங்காரம், இதைத் தமிழில் அணி என்று சொல்வார்கள். அலங்காரம் பண்ணினால் எப்படி ஸுமாராக இருக்கிற ஒரு பெண் கூட அழகாக ஆகிவிடுகிறாளோ அதே மாதிரி இந்தக் கவிகள் நாம் ஸாதாரணமாக உப்புச் சப்பில்லாமல் உபயோகிக்கிற வார்த்தைகளையும் கருத்துக்களையும் தங்களுடைய சாதுர்யத்தால் அலங்காரம் பண்ணி அழகான கவிதைகளாக, காவியங்களாக ஆக்கி விடுகிறார்கள். உவமை, உள்ளர்த்தம் த்வனிக்கச் சொல்லாமல் சொல்வது, இரண்டு அர்த்தத்தில் ச்லேஷை (சிலேடை) பண்ணுவது என்பதாகப் பல நகைகளைப் போட்டு, லலிதமான சப்தங்களை உடைய வார்த்தைகளால் தலைவாரி, புடைவை கட்டி, கவிதைக் கன்னிகையை நல்ல ஸௌந்தர்யவதியாகச் செய்து விடுகிறார்கள். அதனால் கவிதையை அழகுபடுத்தும் விதிகளைத் தரும் சாஸ்த்ரத்துக்கு அலங்கார சாஸ்திரம் என்றே பெயர். தமிழிலும் உவமை- அணி, சிலேடை அணி என்றெல்லாம் 'அணி' என்றே சொல்கிறோம். தமிழில் உள்ள அணி நூலுக்கு ''தண்டியலங்காரம்'' என்றே பேர். தண்டி என்பவர் ஆயிரத்து இரு நூறு வருஷங்களுக்கு முந்தி காஞ்சீபுரத்தில் இருந்த ஸம்ஸ்கிருதக் கவி; கவிதா சாஸ்திரத்தைப் பற்றி ஸம்ஸ்க்ருதத்தில் ''காவ்யாதர்சம்'' என்ற புஸ்தகம் எழுதியிருக்கிறார். அந்தப் புஸ்தகத்தை Base பண்ணிப் பெரும்பாலும் அதையே தழுவி எண்ணூறு வருஷங்களுக்கு முன்பு தமிழ் நாட்டில் ஒருவர் எழுதியது தான் தண்டியலங்காரம்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

பேந்த விழித்துக் கொண்டு கண்ணீரோடு படுத்திருப்பான்.

அவனது உடம்பைத் துடைத்துவிட்டு, அசிங்கங்களை நீக்கி... வேறு உடை மாற்றி, பவுடர் போட்டு; படுக்கை விரிப்பை எடுத்து வேறு மாற்றி, சரி செய்வதற்குள் நள்ளிரவைத் தொட்டு விடுவாள் சுபா.

மறுபுறம் திரும்பிப் படுப்பதற்குள் விடிந்து விடும்!

''சுபா... நீ அந்த வீட்ல படற பாட்டை என்னால் சகிச்சுக்க முடியலேம்மா... பண சுகமும் இல்லே, மன சுகமும் இல்லே, உடம்பு சுகமும் இல்லே...'' சுபாவின் அப்பா புலம்புவார்.

''நான் இல்லேன்னா அவர் கதி என்னப்பா, யோசிச்சுப் பார்த்தீங்களா?''

''ரமணி மட்டுமில்லம்மா... அந்தக் குடும்பமே நாறும்! கிழவனோட பென்ஷன் பல் பொடி வாங்கப் பத்தாது. இதுல சம்பள லிஸ்ட்டோட கணக்கு வேறே. முடியாதுன்னு சொல்லும்மா!''

''சண்டை வரும்பா!''

''வரட்டுமே! தூக்கி எறிஞ்சிட்டு வெளியே வாம்மா! நீ இல்லாம அந்தக் குடும்பம் நாறட்டும்... நீ மனுஷியா, மாடா?''

''தப்புப்பா! அவரைப் பெத்தவங்களை நான் அம்போன்னு விட்டுட்டு வந்தா பாவம்பா... அவரால் பாதிக்கப்பட்டது நான் மட்டுமில்ல... அந்தக் கிழங்களும் தான்.. அந்தப் பொண்ணுக்கு ஒரு கல்யாணத்தைச் செஞ்சு வைக்கணும்... நான் வந்துட்டா யாருப்பா செய்வா?''

''அந்த உணர்வு அங்கே யாருக்கும் இல்லையேம்மா!''

''என்னோட போன ஜன்மத்துப் பாவம்னு நெனச்சு, மனசைத் தேத்திக்குங்கப்பா... பழி உணர்ச்சி வந்தால் எல்லாமே நொடியிலே முடிஞ்சு போயிடும்பா! நான் காலை வீசிப் போட்டு வெளியே நடந்தால் அங்கே இருக்கிற யாராலேயும் எதுவும் செய்ய முடியாது. செத்த பாம்பை அடிக்கிற மாதிரி, அவரோட இயலாமையைப் பயன்படுத்தி அவங்களை நான் பழி வாங்கறது என்னப்பா நியாயம்? என்னைச் சார்ந்து இருக்கிற குற்ற உணர்ச்சி, ஒருவேளை கோபமா வெடிக்குதோ என்னவோ?''

''அவருக்கு உடம்புதான் உணர்ச்சியில்லாமல் போச்சுப்பா. ஆனால் பார்வையும் மனசும் எல்லாத்தையும் பார்த்துக்கிட்டுத் தான் இருக்கும். அது துடிக்கிற துடிப்பு எனக்குப் புரியும்பா!''

அன்று சுபா, வீட்டுக்குள் நுழைந்த போது...

கார்த்திகேயன் இருந்தான்.

''ஹலோ சுபா... எங்கே போயிருந்தீங்க?''

''வந்து ரொம்ப நேரமாச்சா?''

''இல்லே! இப்பத்தான் வந்தேன்!''

''வாங்க அந்த அறைக்குப் போயிரலாம்!''

ரமணி படுத்திருந்த அறைக்குள் அவர்கள் நுழைந்ததும்,

மாமியார் வெளியே பேசுவது தெளிவாகக் காதில் விழுந்தது.

''பாத்தியாமா கதையை! ஆண் பிள்ளை சிநேகம் வாசல்படி தாண்டி உள்ளே வந்தாச்சு!''

''படுக்கை வரைக்கும் போயாச்சுன்னு சொல்லும்மா!'' என்று நாத்தனார் எடுத்துக் கொடுக்க,

சரேலென எழுந்தான் கார்த்திகேயன்.

''புருஷனுக்கும் ஒரு பக்கம் விழுந்தாச்சு... சத்தம் போட வழியில்லாமல் பேச்சும் போயாச்சு...''

''சுபா, ஏன் இவங்களைச் சும்மா விட்டு வச்சிருக்கீங்க? என்னவெல்லாம் பேசறாங்க? நான் போய் நாக்கைப் பிடுங்கிக்கற மாதிரி நாலு கேள்விகள் கேட்கட்டுமா?''

பதறினாள் சுபா...

திரும்பி ரமணியைப் பார்த்தாள்.

அவன் கார்த்திக் பக்கமாக இடது கண்ணை அசைத்து, தன் அருகே வருமாறு அழைத்தான்.

கார்த்திக் குழப்பத்துடன் கட்டில் அருகே போய் நிற்க, இடது கையால் படுக்கையில் தட்டி உட்காருமாறு சொன்னான் ரமணி.

உட்கார்ந்தான் கார்த்திக்.

தன் கையை மெல்லக் கார்த்திக்கின் தொடை மேல் வைத்து, இதழ் கோணச் சிரித்தான்... ஸ்நேகமாக அவனையும், சுபாவையும் மாறி மாறிப் பார்த்தான்.

முதலில் விழித்த கார்த்திக், அந்தச் சைகையை மெல்ல மெல்ல நெஞ்சுக்குள் வாங்கிக் கொண்டு, புரிந்து கொள்ளத் தொடங்கிய போது, உடம்பு சிலிர்த்தது.

''நான் சந்தேகமே படவில்லை என் நண்பனே! என் மனைவியைப் பற்றி எனக்குத் தெரியும் என்று சர்வ நிச்சயமாகச் சொன்னது அந்த உதட்டுக் கோணல். நீயும் அவளும் உன்னதமான நட்பை என்றும் தொடரலாம் என்று வாழ்த்தியது குளிர்ந்து, மெலிந்த அந்த இடது கை!''

''உடம்புதான் விழுந்து போச்சு சுபா... ஆனால் மனசு ரொம்ப உறுதியா இருக்கு!''

ரமணியின் விழியோரத்துத் துளியை மெல்லத் துடைத்த கார்த்திக் சட்டென எழுந்து கொண்டான்.

''வரட்டுமா சுபா... யு ஆர் லக்கி!''

வாசல் வரை போன சுபா பெருமிதம் பொங்க அவனுக்குக் கையசைத்தாள்!

இந்தக் கையசைப்புக்கு, கள்ளத்தனமான விமர்சனங்கள் காதோரம் வந்து முட்டும்...!

வரட்டுமே!

ரமணியின் நம்பிக்கை என்ற கவசம் இருக்கும் வரை எந்த அம்பும் சுபாவைத் துளைக்காது!

உள்ளே பரபரப்பாக நுழைகிறாள்... இனி, இரவுச் சமையலைக் கவனிக்க வேண்டும்...! இன்னும் சில நிமிடங்களில் அவளது மற்றொரு நாள் ஆரம்பமாகிவிடும்!







# அம்மாவின் அன்புடன் அம்மானை பிடிக்க முயலும் அன்புச் செல்வம்

அச் செல்வத்தை
ஊக்குவித்து வளமான
வாழ்வு அளிக்க
இன்றே போலியோ சொட்டு
மருந்து அளித்திடுங்கள்

உங்கள் குழந்தைக்கு போலியோ சொட்டு மருந்து அளித்து இளம்பிள்ளை வாத நோயிலிருந்து பாதுகாப்பு அளித்திடுங்கள்

**எல்லா வார நாட்களிலும்**
**மாலை : 3 முதல் 6 வரை**
**ஞாயிறு : விடுமுறை**

**மருத்துவரின் மேற்பார்வையில் போலியோ சொட்டு மருந்து டிரிபிளாண்டிஜென் மற்றும் மீஸில்ஸ் வாக்ஸின் அளிக்கப்படும் இடம் :**

## தமிழ்நாடு தாதா பார்மஸூடிகல்ஸ் லிமிடெட்

10, பத்மாவதியார் சாலை, ஜெய்பூர் நகர், (ஆயிரம் விளக்கு மசூதி அருகில்)
சென்னை-600 086, தொலைபேசி : 470656 479603

# ஊர்ப் பஞ்சாயத்து

ஊர்க் கூட்டமே அந்தப் பிள்ளையார் கோவில் அரச மரத்தடியில் கூடியிருந்தது.

பந்தயக் குதிரையைப் போல் நின்றிருந்த சின்னமணியைக் கேள்வியுடன் பார்த்தார் நாட்டாமை.

''ஐயா, நேத்து பொழுது சாயற வேளையில் சோளக்காட்டுக்குத் தண்ணீர் பாச்சிட்டு இருந்தேனுங்க. அந்த வழியா வந்த இந்தப் பொண்ணு தப்புக் காரியம் பண்றதுக்காக என்னைக் கட்டாயப்படுத்திச் சோளக்காட்டுக்குள்ளே கூப்பிட்டாள்ங்க.....!'' என்று அவமானத்தால் கூனிக் குறுகி நின்றிருந்த இளம் பெண் ராஜாத்தியைச் சுட்டிக்காட்டிப் பேசினான் சின்னமணி.

''என்ன தாயி..... இவன் சொல்றது நிஜந் தானா....? கம்முனு கெடந்தா எப்படி....?'' சின்னமணி செரல்வது பொய்யென்று தெரிந்தும், கடமைக்காகக் கேட்டு வைத்தார் நாட்டாமை.

ராஜாத்தியின் கண்களிலிருந்து இரண்டு சொட்டுக் கண்ணீர் மட்டுமே பதிலாகக் கிடைத்தது.

''நாட்டாமை ஐயா! என் மகள் தாழ்ந்த ஜாதிப் பொண்ணு. அதுவுமில்லாமல் நாங்க ஏழைங்க.... அந்த மாரியாத்தாளையும் உங்களையும்விட்டா எங்களுக்கு நாதி கிடையாது. என் மகள் உத்தமி! நீங்கதான் காப்பாத்தணும்.....!'' என்று ராஜாத்தியின் வயசான தகப்பன், நாட்டாமையின் காலில் விழுந்து கதறினான்.

''இதோ பாருடா சின்னமணி, இந்தப் பொண்ணைப் பார்த்தா அந்த மாதிரி பொண்ணாகத் தெரியலே..... நல்லா யோசனை பண்ணிச் சொல்லுடா.....'' ஆயிரக்கணக்கான பஞ்சாயத்துக்களைக் கண்ட அனுபவத்துடன் பேசினார் நாட்டாமை.

''போன வருஷம் ஆடி மாசம் வாக்குல நான் இவளோட கையைப் பிடிச்சு இழுத்துட்டதுக்கு, இதே பஞ்சாயத்துல என்னை நிறுத்தி, ஐந்நூறு ரூபாயும், ஒரு மூட்டை நெல்லும் 'குத்தம்' வச்சீங்களே, மறந்து போச்சா....? இந்தக் கைகாரியை நல்லவள்னு சொல்றீங்களே, அதை உங்களாலே நிருபிக்க முடியுமா?'' என்று பழியுணர்ச்சியுடன் பாய்ந்தான் சின்னமணி.

''டேய் சின்னமணி! அநியாயமா ஒரு கன்னிப் பெண்ணோட வாழ்க்கையை நாசமாக்கிடாதே.... பஞ்சாயத்தை வாபஸ் வாங்கிக்கடா...!'' என்று புணிவு கலந்த உரிமையுடன் பேசினார் நாட்டாமை.

''இவ நல்ல பொண்ணு, கன்னிப் பொண்ணுன்னு வாய்க்கு வாய் சொல்றீங்களே, அதை நிருபிச்சுட்டுப் பஞ்சாயத்தைக் கலைச்சிடுங்க. இல்லேன்னா, ஏழு ஊர்ப் பஞ்சாயத்தைக்கூட்டி உங்க மானத்தையும் சேர்த்து வாங்கிடுவேன்!'' உடும்பாக உட்கார்ந்தான் சின்னமணி.

''இவள் நல்லவள்னு நிரூபிக்கணும் அவ்வளவுதானே!'' தனது இடுப்பு முடிப்பிலிருந்து ஒன்றே கால் ரூபாயை எடுத்து, ராஜாத்தியின் தகப்பனை அழைத்து. ''உங்க பொண்ணு ராஜாத்தியை, என் மகன் ராமனுக்கு வர்ற சித்திரையில கல்யாணம் முடிக்கப் போறதா முடிவு பண்ணிட்டேன்.....! இந்த ஒன்றே கால் ரூபாயை அச்சாரமா வாங்கிக்கங்க.....!'' என்று சொல்லி பெரியவரின் கையில் காசைத் திணித்தார் நாட்டாமை.

''ஐயா! எங்க ஜாதி....?''

திகைப்புடன் கேட்டார் பெரியவர்.

''தெரியும் பெரியவரே, நீதியைக் காப்பாத்தணும்னா, 'ஜாதி'யைப் பார்த்தால் முடியுமா?'' என்று உறுதியாக உதிர்ந்தது நாட்டாமையின் வார்த்தைகள்.

ஆயிரம் பேய் அறைந்த அபூர்வ சின்னமணியைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது!



— சீதாலட்சுமி நீலமேகம்



* இதுபோன்ற பள்ளங்கள் ஏராளம்.



* பள்ளத்தை வேலியிட்டும் பாதுகாப்போம்!

போன்
துடன்
போய்ப்
மோசம்
ஞடன்
ளவோ
ஆ
சாலைக
மழை
நீர் சா

# சபிக்கப்பட்ட செல் வ சால

* எலிபண்ட் கேட் தெருவா? எருமைமாடுகள் தெருவா?

**— விமோசனம் உண்டா**
**சாந்தா ஷீலா நாயர் பேட்**

"சன் தியேட்டர் பக்க
துல கிரியப்பா தெருன்னு இரு
குதுங்க. அங்க வந்து கொஞ்ச
பாருங்க! ஒரே குப்பையும் சா
கடைத் தண்ணியுமா தேங்கி
போய்ப் பன்னிங்களா மேயுது
மூளைக் காய்ச்சல் பன்னிகளா
தான் பரவுதுன்னு வேறே இப்
சொல்லிக்கிட்டிருக்காங்க. உ
ளாட்சித் துறை அமைச்ச
கே.ஏ.கே. தொகுதியிலேயே இ
படி இருக்குதுங்களே — நீங்
இதைப் பத்தி ஏதாச்சும் எழுத
கூடாதா?" —

நமது அலுவலகத்துக்

* இது சாலையா? இல்லே சாக்கடை



வாசகர் ஒருவர் ஆதங்கத்
...ார். கிரியப்பா சாலைக்குப்
...தபோது, சில பகுதிகள் படு
...ந்தாலும் மற்ற சில சாலைக
...நோக்குகையில் அது எவ்வ
...ாம் என்று தோன்றியது.
...ன்னை நகரில் சபிக்கப்பட்ட
... பஞ்சம்?
...லத்தில் முழங்கால் அளவு
... தேங்கி நிற்க, வெள்ளை

# ...ல ...லைச் ...கள்!

வெளேர் யூனிஃபார்ம் கான்வாஸ் ஷூஸ் சகி தம் அந்தப் பகுதியைக் கடக்க முடியாமல் தவிக்கும் மாணவர்களின் சங்கடத்தைச் சொல்வதா?

ஒரு மழையில் சாலை அரிக்கப்பட்டுக் கருங்கல் ஜல்லி விழித்துக் கொண்டு பிதுங்கி நிற்க, அதில் செல்லும் சைக்கிள், மற்றும் சைக்கிள் ரிக்ஷாக்களின் சக்கரங்கள் தினந்தோறும் பங்சர் ஆகி, டியூப் கிழிந்து செலவு வைக்கும் கஷ்டத்தைச் சொல்வதா?

குண்டும் குழியும் நிறைந்த சாலைகளில் ஸ்கூட்டர், மோட்டார் பைக்கின் பின் சீட்டில் உட்கார்ந்து செல்லும் பிரயாணிகளின் முதுகெலும்பு குலுக்கி

ஜம்புலிங்கம் தெரு — அடையாறு. தெரு என்ற பெயரில் ஓர் அசிங்கம்.



அன்னை பிள்ளை தெரு.



யெடுக்கப்படும் பரிதாபத்தைச் சொல்வதா?

மாறி மாறி ஃபோன் இலாக்கா, எம்.சி.எஸ். அல்லது குடிநீர் வாரியம் 'ரிப்பேர்' என்ற பலகையிட்டு ரோடுகளைத் தோண்டி வைக்க, கார் மற்றும் இதர வாகன ஓட்டிகள் வளைந்தும் நெளிந்தும் 'ஆப்ஸ்டகில் ரேஸ்' ஓடுவதைச் சொல்வதா?

திருமலைப் பிள்ளை சாலை — ஹபிபுல்லா சாலை சந்திப்பில் ஒரு பெரிய பள்ளம் கான்கிரீட் வேலியால் 'அழகாக' மூடப்பட்டுப் பல வாரங்களாகக் கவனிப்பாரற்றுக் கிடப்பதைச் சொல்வதா?

இத்தனை கேள்விகளை மனத்தில் தேக்கி கார்ப்பரேஷன் கமிஷனர் சாந்தா ஷீலா நாயரைச் சந்தித்தோம். சாலைப் பிரச்னைகளைப் பற்றி அவர் பேசியதிலிருந்து ஒரு விஷயம் நன்றாகப் புரிந்தது: பொது மக்கள் அன்றாட வாழ்க்கையில் போராடுவதைப் போல் கார்ப்பரேஷனும் போராடிக் கொண்டுதான் இருக்கிறது! —

கே: கார்ப்பரேஷனின் வருடாந்திர செலவு என்ன? அதில் சாலைகள் போட மற்றும் பராமரிக்க எவ்வளவு ஒதுக்கப்பட்டுள்ளது?

ப: 1985 — 86 இல் கார்ப்பரேஷன் பதினைந்து கோடி ரூபாய் செலவழித்திருக்கிறது. இதில் சுமார் எட்டு கோடி ரூபாய் சாலைகளுக்கென்று செலவழித்ததோடு, சென்ற ஆண்டு வெள்ளத்தால் நிறையச் சேதம் ஏற்பட்டதால் அதிகப்படியாக மூன்று கோடி உபயோகித்தோம்.

கே: புதிய சாலைகள் போடவும், பராமரிக்கவும் இந்தத் தொகை போதுமானதா?

ப: நிச்சயமாகப் போதாது தான்! சென்னை நகரில் சுமார் 1600 கி.மீ. சாலைகள் உள்ளன. முறையாக இவற்றைப் பராமரிப்பதென்றால் ஐந்தாண்டுகளுக்கு ஒருமுறை ஒவ்வொரு சாலையையும் முற்றிலுமாகப் புதுப்பிக்க வேண்டும். இதற்கு ஒவ்வொரு வருடமும் பத்து கோடி ரூபாய் தேவைப்படும். ஆனால் கார்ப்பரேஷனின் மொத்த செலவே பதினைந்து கோடிதான்! புதிய சாலைகள் போடுவது என்பது அபூர்வம். புதிய காலனிகள் உருவாகும் இடங்களில் சாலைகள் அமைக்கச் சுமார் ஐம்பது முதல் எண்பது லட்சங்கள் செலவழிக்கிறோம்.

பம்பாய், தில்லி போன்ற நகரங்களில் எப்படிச் சமாளிக்கிறார்கள் என்று கேட்பீர்கள். பம்பாய் கார்ப்பரேஷனின் வருடாந்திரச் செலவு அறுநூறு கோடி ரூபாய். இதற்கு முக்கியக் காரணம் அவர்கள் Octrol எனப்படும் சுலால் வரி வசூலிப்பதுதான். octrol மூலம் அவர்களுக்கு 200 — 300 கோடி கிடைக்கிறது. சென்னையில் octrol வசூலிப்பு இல்லை.

பெங்களூர் கார்ப்பரேஷனும் octrol விதித்துக் கொண்டிருந்தது. இப்போது அதை நிறுத்திவிட்டாலும் அதன் மூலம் நேரும் இழப்பைக் கர்நாடக அரசு ஈடு செய்து விடுகிறது. அஹமதாபாத் போன்ற

* சாந்தா ஷீலா நாயர்



‘இங்கே
மனிதர்கள் உயிர் வாழவே
போராடிக்
கொண்டிருக்கும்போது
அவர்களிடம்
சுத்தம் பற்றிப்
பேசி என்ன பயன்?’

நாயக உரிமை! — ரங்கநாதன் தெரு.



• நகரத்தெருவிலே குப்பையைக் கொட்டுவது யார்

சில சிறிய நகரங்களின் கார்ப்பரேஷன்கள் கூடச் சென்னை கார்ப்பரேஷனை விட அதிகம் செலவழிக்கின்றன.

கே: கார்ப்பரேஷனின் வருமானத்தில் பெரும் பகுதி சொத்து வரி (Property Tax) வசூல் மூலம் கிடைக்கிறது. இந்த வரி வசூலில் நிறைய ஊழல் இருக்கிறது. வீட்டு வரி வசூலிக்க வரும் ஊழியர்கள் வீட்டின் சொந்தக்காரர்களிடம் லஞ்சம் வாங்கிக் கொண்டு வீட்டின் மொத்த பரப்பளவுக் கணக்கைக் குறைத்து எழுதிக் கொடுக்கிறார்களாம். இதனால் கார்ப்பரேஷனுக்கு வருவாய் குறைகிறது. வீடு கட்டுவதற்கு முன்னும், விஸ்தரிப்பதற்கு முன்னரும் கார்ப்பரேஷனின் அனுமதி பெற வேண்டும் என்ற விதி இருப்பதால் ஒவ்வொரு வீட்டின் பரப்பளவும் கார்ப்பரேஷன் கணக்குகளில் இருக்கும். இதோடு வரித் தொகையை ஒப்பிட்டு ஏமாற்றுவோரையும் லஞ்சம் வாங்குவோரையும் கண்டுபிடித்துத் தண்டிக்கலாமே?

ப: ஒவ்வொரு முறையும் ஒப்பு நோக்கிச் சரி பார்ப்பது கடினமான காரியம். இயன்ற வரை இந்த ஊழலைத் தடுக்கப் பாதுகாப்பு நடவடிக்கை எடுக்கிறோம். கேள்விகள் எழுப்பினால் சம்பந்தப்பட்டவர்கள் உடனே நீதிமன்றத்துக்குப் போய் ‘Stay’ வாங்கிவிடுகிறார்கள். எங்களுக்கு வரும் கொஞ்சம் வருவாயும் நின்று போய்விடும். சொத்து வரி (Property Tax) சட்ட அமைப்பைத் திருத்தி அமைக்க முடியுமா என ஆராய்ந்து வருகிறோம். இங்கு இன்னொன்றையும் சொல்ல விரும்புகிறேன் — கார்ப்பரேஷனில் சிலர் லஞ்சம் வாங்குவது உண்மையாக இருக்கலாம். ஆனால் பொது மக்கள் ஏன் அதற்கு இடமளிக்க வேண்டும்?

கே: அஸோஸியேடட் மில்லரின் சாலை போடும் மிஷினைத் தருவித்து அண்ணா சமாதி அருகே அதை இன்னொரு சமாதியைப் போல் நிறுத்தி வைத்திருப்பதாகச் சட்ட சபையில் பேசியிருக்கிறார்கள். அந்த மிஷின் எவ்வளவு தூரம் உபயோகமானது? சிக்கனமானது? குறுகலான சாலைகளில் அதைப் பயன்படுத்த முடியுமா?

ப: அந்த மிஷின் ஒரு காண்ட்ராக்டருக்குச் சொந்தமானது. வழக்கப்படி டெண்டர் கேட்டுத்தான் அந்தக் காண்ட்ராக்டருடன் ஒப்பந்தம் செய்து கொண்டோம். அது சிறிது காலத்துக்கு ஓய்வாக நிற்பதால் கார்ப்பரேஷனுக்கு எந்த நஷ்டமும் கிடையாது.

சாலையின் மேல்பரப்பில் சூடேற்றி, சிறிதளவு சுரண்டி எடுத்து அதனைத் திரும்பவும் உபயோகிக்கக் கூடியது இந்த மிஷின். ஆனால் சாலை ஏற்கெனவே ஓரளவு கனமுள்ளதாக இருக்க வேண்டும். கனம் குறைவான சாலைகளைச் சுரண்ட முடியாது. இதனால் பிரமாதமாக லாபம் இல்லாவிட்டாலும்



" இதுவும் சென்னை சாலைதான்! (பெஸன்ட் அவென்யூ).

போடப்படும் சாலைகளின் தரம் நிச்சயமாக இன்னும் உயர்வாக இருக்கும். கிண்டி ராஜ்பவன் ரோட், காமராஜர் சாலை போன்ற இடங்களில் நீங்களே பார்த்திருப்பீர்கள்.

குறுகலான சாலைகளில் அதைப் பயன்படுத்துவது பற்றிக் கேட்டிருக்கிறீர்கள். பதினைன்று அல்லது பன்னிரெண்டு அடி அகலச் சாலைகளில் இதை உபயோகிக்கலாம். ஆனால் சாலையில் கனம் இருக்க வேண்டும்.

கே: பழுது பார்க்கப்படும் சாலைகளும் புதிதாகப் போடப்படும் சாலைகளும் ஒரு மழையைக் கூடத் தாங்குவதில்லையே?

ப: மழை மட்டும் அதற்குக் காரணமல்ல., சாலை போட உபயோகிக்கப்படும் bitumen என்ற மூலப்பொருள் தட்பவெப்ப நிலைக்கேற்ப மாற்றங்களுக்கு உள்ளாகிறது. இதனாலும் சாலைகள் பாதிக்கப்படுகின்றன. இதைத் தவிர்க்க வேண்டுமானால் கான்க்ரீட் சாலைகள்தான் போட வேண்டும்! அவை நமக்கு எட்டாக் கனி என்பதைச் சொல்லத் தேவையில்லை. மேலும், 25 மில்லி மீட்டர் மற்றும் 40 மில்லி மீட்டர் கனத்தில் இரு வகைச் சாலைகள் போடுகிறோம். அதிக கனமுள்ள சாலைகள்தான் பஸ் லாரி போன்ற கனரக வாகனப் போக்குவரத்தைத் தாங்கக் கூடியவை. ஆனால் 25 எம். எம். சாலை ஒன்றைப் புதிதாகப் போட்டால் அல்லது சரி செய்தால் உடனே அதில் அனுமதி இன்றியே பல்லவன் பஸ்களை ஓடவிடுகிறார்கள். இதனால் சாலையின் ஆயுள் குறைந்து விடுகிறது.

சாலைகள் சீக்கிரமே பழுதாகிவிட இன்னொரு காரணம் அவற்றை அடிக்கடி தோண்டிக் கொண்டே இருப்பதுதான். மின் வாரியம், டெலிபோன் இலாகா, குடிநீர் வழங்கும் மற்றும் கழிவுநீர் அகற்றும் வாரியம் ஆகியன சாலைகளைத் தோண்டியெடுத்து வேலை செய்து கொண்டே இருக்கின்றன. அவர்களை நான் தடை செய்ய முடியாது. அப்படிச் செய்தால் அது பொது மக்களுக்குத்தான் பெரிய இடைஞ்சலாக இருக்கும்! பழுது பார்க்கும் பணி முடிந்ததும் சாலையின் அந்தப் பகுதி மட்டும் மீண்டும் சரி செய்யப்படுகிறது. ஒவ்வொரு முறை வெட்டும் போதும் சாலையில் மாறாத வடுவை நாம் ஏற்படுத்துகிறோம். பிறகு எவ்வளவுதான் சிறப்பாகச் சரி செய்தாலும் இந்த வடு இருந்து கொண்டேதான் இருக்கும். சாலையில் ஒரு லேசான ஏற்ற இறக்கம் இருக்கும். அந்தப் பகுதி சீக்கிரமே திரும்பவும் பழுதாக வாய்ப்பும் இருக்கிறது.

கே: டெலிபோன், மின் துறை மற்றும் MMWSSB யுடன் நீங்கள் ஓர் உடன்பாட்டுக்கு வரலாமே. ஒரு சாலையைச் சீர் செய்வதற்கு முன்னால் இந்த இலாகாக்களுக்குத் தெரிவித்தால் அவர்கள் தங்கள் வேலைகளை முன் கூட்டியே முடித்துக் கொள்வார்களே.

ப: இதுநாள்வரை அப்படிச் செய்யாமல் இருந்தோம் என்றா நினைக்கிறீர்கள்? எல்லாவற்றையும் மீறித்தான் சாலைகள் வதைபடுகின்றன! இப்போது கூட பாந்தியன் ரோடில் நாங்கள் வேலை ஆரம்பிப்பதற்கு முன்னால் இதர இலாகாக்களைத் தங்கள் வேலைகளை முடித்துக் கொள்ளும்படி சொல்லியிருக்கிறோம். ஒவ்வொரு மாதமும் இந்த மூன்று இலாகாக்களுடனும் இணைந்து 'மீட்டிங்' நடத்துகிறோம்.

கே: பழுது பார்க்கும் பணிகளை இரவு நேரங்களில் செய்தால் போக்குவரத்துக்கு இடைஞ்சல் இல்லாமல் இருக்குமே?

ப: இதையும் முயன்று பார்த்திருக்கிறோம். ஆனால் அது வெற்றிகரமாக இல்லை. இரவு நேரங்களில் செய்யப்படும் வேலையின் அளவு குறைவாக இருப்பதோடு, சாலை போடுவதில் ஈடுபடும் பெண் ஊழியர்களுக்கு இதனால் சிரமம் அதிகம். குழந்தை குட்டிகளுடன் வேலைக்கு வரும் இவர்களது கஷ்டத்தை நினைத்துப் பார்க்க வேண்டும். ஒரு தொழிற்சாலை ஊழியனைப் போல் 'நைட் ஷிஃப்ட்' பார்க்கும் பழக்கம் இவர்களிடையே இன்னும் ஏற்படவில்லை.

கே: ஒவ்வொரு வருடமும் மழைத் தண்ணீர் சாலைகளில் தேங்கிப் போக்குவரத்துக்கும் பாதசாரிகளுக்கும் ஏகப்பட்ட இடையூறு செய்கிறதே. மழை 'சீசன்' ஆரம்பிப்பதற்கு முன்னரே முன்னெச்சரிக்கை நடவடிக்கை எடுக்கக் கூடாதா?

ப: எடுக்கலாம். எடுத்துக் கொண்டுதான் இருக்கிறோம். ஆனால் 1600 கி. மீ. சாலைகளுக்கு நானூறு கி. மீ. அளவுதான் மழை நீர் அகற்றும் சாக்கடைகள் (storm water drains) உள்ளன. இவை போதவே போதாது. இந்த லட்சணத்தில் அவரவர் வீட்டுக் கழிவு நீரையும் இந்தச் சாக்கடைகளில் திருட்டுத்தனமாக இணைத்துவிடுகிறார்கள். இதனால் மழைக்காலத்தில் ஏகப்பட்ட தொல்லை. மேலும் நமது சாலைகளில் கிடக்கும் கண்ட குப்பைகளும் சாணியும் வேறு சேர்ந்து அடைப்புக்களை ஏற்படுத்துகின்றன.

கே: பொது மக்களிடையே சுகாதார உணர்வையும், நமது நகரத்தைத் துப்புரவாக வைத்துக் கொள்ள வேண்டும் என்ற உணர்வையும் ஏற்படுத்தப் பல நடவடிக்கைகள் எடுத்தீர்கள். அவை நீடித்து நிலைக்கவில்லையே, அவற்றால் எந்த மாற்றமும் நிகழ்ந்ததாகத் தெரியவில்லையே?

ப: சுகாதார உணர்வை ஏற்படுத்துவது என்பது அவ்வளவு சுலபமான காரியமில்லை. வேரூன்றிப்போன பழக்கங்கள் மாறத் தலை முறைகள் ஆகலாம். 'சிங்கப்பூரில் முடிகிறதே' என்பார்கள். ஒரு ஜனநாயக நாட்டில் தொட்டதற்கெல்லாம் அபராதம் விதிப்பது என்பது சாத்தியமில்லை. மேலும் இந்தச் சுகாதாரப் பிரச்னையின் வேர் பொரு

ளாதாரத்தில்தான் இருக்கிறது. இங்கே மனிதர்கள் உயிர் வாழவே போராடிக் கொண்டிருக்கும் போது அவர்களிடம் சுத்தம் பற்றிப் பேசி என்ன பயன்? அதற்காகப் படித்த, வசதியுள்ளவர்கள் ரொம்ப சரியாக நடந்து கொள்கிறார்கள் என்று சொல்லிவிட முடியாது. அவர்கள் குறைந்த பட்சம் இந்த எளியவர்களுக்கு வழிகாட்டிகளாக விளங்கலாம். அதைக் கூட அவர்கள் செய்வதில்லை.

கே: கழிப்பிடங்களை நவீனப்படுத்தி, இருபத்து நாலு மணி நேரமும் தண்ணீர் கிடைக்கும்படி செய்தாலே பெரிய உபகாரமாக இருக்குமே?

ப: எல்லாம் செய்யலாம். ஆனால் பொது மக்கள் ஒத்துழைப்பு தேவை. கழிப்பிடங்களில் கண்ட குப்பைகளைப் போடாமல், அங்குள்ள குழாய்களையும் பம்புகளையும் திருடிக் கொண்டு போகாமல் இருந்தாலே பெரிய உபகாரமாக இருக்கும். இந்தப் 'பம்புத்' திருட்டைச் சமாளிக்க இப்போது சில கழிப்பிடங்களில் submersible பம்ப்செட்டுகளைப் பூமிக்கடியில் அமைக்க ஏற்பாடு செய்துள்ளோம். குழந்தைகளுக்கென்று பிரத்தியேகமாகச் சுமார் எண்பது கழிப்பிடங்களைக் கட்டித் தந்திருக்கிறோம். அதே இடங்களில் பெண்களுக்குத் துணி துவைக்கும்வசதியும்செய்து தந்திருக்கிறோம். துணி அலசும் தண்ணீரே கழிப்பிடத்தைச் சுத்தம் செய்யும் வகையில் இவை அமைந்துள்ளன. மேலும் 'சுலப் இன்டர்நேஷனல்' என்ற காந்தியக் கொள்கையுடைய தனியார் நிறுவனம் காண்டிராக்ட் அடிப்படையில் கழிப்பிடம் ஒன்றைப் பராமரித்து வருகிறது. குறைந்த கட்டணம் வசூலித்து, சுத்தமாகக் கழிப்பிடங்களை வைத்துள்ளது. கட்டண வசூலில் குறியாக இல்லாததால் ஜி. என். செட்டி ரோடில் உள்ள இந்தக் கழிப்பிடம் நன்றாகவே பராமரிக்கப்பட்டு வருகிறது.

எவ்வளவுதான் முயற்சிகள் எடுத்துக் கொண்டாலும் எங்களால் மட்டுமே எதையும் சாதித்துவிட முடியாது. இது நமது நகரம், இதன் பராமரிப்பில் நமக்கும் பங்கு இருக்கிறது என்ற உணர்வு மக்களுக்கு இருக்க வேண்டும். எல்லோரும் பெடிஷன் போடத் தயாராய் இருக்கிறார்கள்; நாங்கள் வரி செலுத்துகிறோம்; எங்களுக்கு உரிமை உண்டு என்று முழங்குகிறார்கள். பத்து ரூபாய் வரி செலுத்தும்ஒவ்வொருநபருக்கும்கார்ப்பரேஷன் ஐம்பது ரூபாய் செலவு செய்கிறது! காரியார்த்தமாக உதவ முன்வருவோர் மிகக் குறைவே. ஒரு பெண்மணி தன் வீட்டின் முன்னால் உள்ள தெருவைப் பலர் கழிப்பிடமாகப் பயன்படுத்துவதாக முதலில் புகார் செய்தார். ஓரிரு முறை நடவடிக்கை எடுத்தும் பலனில்லை. உடனே அவரும் அவர் பெண்களும் ஒவ்வொரு நாளும் காலையில் துடைப்பமும் கையுமாகத் தெருவிற்கு வந்து கூட்ட ஆரம்பித்தார்கள். அசிங்கம் செய்தவர்கள் அவமானப்பட்டுப் போய் அங்கு வருவதை நிறுத்தி விட்டார்கள். இவ்வளவையும் செய்த அந்தக் குடும்பத்தினர் எங்களுக்கு நன்றி தெரிவித்து வாழ்த்து அனுப்பினார்கள்!

— நமது நிருபர்கள்

புகைப்படங்கள்: கே.வி. ஆனந்த்: சென்னை மக்களிடையே, சென்னை நகரின் பல்வேறு பிரச்னைகள் பற்றி ஒரு விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தி வரும் 'கன்ஸ்யூமர் ஆக்ஷன் க்ரூப்' நடத்திய புகைப்படக் கண்காட்சியில் இடம் பெற்றிருந்த போட்டோக்கள் சிலவும் இங்கே இடம்பெற்றுள்ளன.

மேலட்டை வண்ணப்படங்கள்: யோகா

"லக்ஸின் தனிச்சிறந்த புதுமணம் மிக அருமை தெரியுமா?" ஜெயஸ்ரீ சொல்கிறார்.

''பள்ளியில் விளையாட்டிலும், படவுலகிலும் நடனத்திலும் எப்போதும் புகழ் உள்ள எனக்கு, எனது மேனியெழிலை பரிசுத்தமாக, மென்மையாக பராமரிக்க, வேண்டும் லக்ஸ். அதுவும் இப்போது அதன் தனிச் சிறந்த, அருமையான புதுமணம் காரணமாக, அதை இன்னும் அதிகம் நேசிக்கிறேன். நீங்களே உபயோகித்துப் பாருங்களேன்'' என்கிறார் ஜெயஸ்ரீ.

லக்ஸ்–சினிமா நட்சத்திரங்களின் அழகு சோப்.

இந்துஸ்தான் லீவர் லிமிடெடின் தயாரிப்பு.



# மோகம் என்பது இதுதானே?

6

சுந்தரம் தமக்கு வந்த கடிதத்தை வியப்புடன் ஒருமுறைக்கு இருமுறையாகப் படித்தார். புவனாவுக்கு இப்படி ஓர் அதிர்ஷ்டமா? விஷயம் கேட்டுப் புவனா எப்படிப் பூரித்துப் போவாள் எனக் கற்பனை செய்து பார்த்தார்.

''என்னங்க, ஸ்கூலுக்கு இன்னும் கிளம்பலே?'' கேட்டபடி வந்த ஞானசுந்தரி, கணவன் கையில் கடிதத்துடன் நிற்பதைப் பார்த்தாள். வெளிநாட்டுத் தபால் முத்திரையை அவள் பார்வை வெகு வேகமாக இனம் கண்டு கொண்டது. சேகரின் தந்தையின் கடிதமாக்கும்! நண்பனிடமிருந்துஒரு சின்னச் செய்தி வந்தால் கூடப் போதும். மெய்மறந்து உட்கார்ந்துவிடும் கணவன் சுபாவம் அவளுக்குத் தெரியும். சில சமயம் அவள் அலுத்துக்கொள்வாள்: ''இப்படிப் பதினைஞ்சும், இருவதுமாத் தபாலாபீசுக்குத் தானம் செய்யறதுக்குப் பதிலா, ஒங்க ஃப்ரெண்டு குழந்தைகளுக்கு ஒரு நைலான் தாவணியாவது எடுத்துத் தரலாம்.''

சுந்தரம் அவளைப் புன்னகையுடன் நிமிர்ந்து பார்ப்பார். அதில் பல விதமான அர்த்தங்கள் இருக்கும். 'அடி அசடு. வாழ்வில் வேறு, வேறு கோடிக்குப் போன பிறகும், அனுபவங்களை ஒளிவு மறைவில்லாமப் பகிர்ந்து கொள்ளும் நட்பென்ற உணர்வும், நைலான் தாவணியும் ஒன்று?'

கிருஷ்ணனின் மனைவியுடன் அவளாலென்னவோ பாந்தமாக நின்று கூடப் பேச முடியாது. வைரத்தோடும், மூக்குத்தியும், கூடைத் தங்க நகைகளும், ஜரிகைப் புடைவையுமாக வலம் வரும் கிராமத்துப் பலதனக்காரர்கள் ஏற்படுத்தாத அன்னியத்தை, கிருஷ்ணன் மனைவியின் ஒற்றை முத்துத் தோடும், கைத்தறிப் புடைவையும் ஏற்படுத்தும். அவளுக்குப் புரியவே புரியாத இந்த வெளிநாட்டு மனிதர்களுடன், அவள் கணவருக்கு மட்டும் எப்படித்தான் பொருந்துகிறதோ?

''ம்... நேரமாகிறதில்லே. கிளம்புங்க..'' கணவனை அவசரப்படுத்தினாள்.

''ஞானம் விஷயம் தெரிஞ்சா நீ ஆச்சரியத்திலே மூர்ச்சையாகி விடுவே...''

''ஆங்... தெரியுங்க... உங்க ஃப்ரெண்டு புதுக்கார் வாங்கியிருக்கேன்... ஆப்பிரிக்கக் காட்டுலே புலியைப் பார்த்தேன்னு ஏதாவது வள வளன்னு எழுதியிருப்பார். அவர் சேர்த்துச் சேர்த்து இங்கிலீஷ் எழுதற விதம் எனக்குப் படிக்கவே முடியாது. சாயங்காலம் வீட்டுக்கு வந்து படிச்சுச் சொல்லுங்க... ம்... ப்ரதோஷ பூஜையிருக்கு. மறக்காதீங்க...''

''ஆரம்பித்தால் நிறுத்தாம பேசறியே... கிருஷ்ணன் எழுதியிருக்கிற விஷயம் அவளைப்



உஷா சுப்பிரமணியன்

பத்தியில்லே... இதோ பார்... ப்ளேன் டிக்கெட்... நம்ம பெண்ணுக்கு அனுப்பியிருக்கான்..."

"நம்ம பெண்ணு, எந்தப் பொண்ணு... நம்ம பொண்ணுங்க ப்ளேன்லே போவாங்களா...?"

"ஆமாம், கேளு... கிருஷ்ணன் எழுதியிருக்கான், புவனாவை விடுமுறையில் குவெய்த்துக்கு அனுப்பச் சொல்லி..."

"நல்லாயிருக்கே... அவங்க ஊரெல்லாம் என்ன அடுத்த ஊரா...? கொழந்தை ப்ளேனில் ஏறப் பயப்படாதா?" ஏதோ பதில் சொன்னாலும், ஞானத்தாலும் ஆச்சரியத்தை அடக்க முடியவில்லை. அவள் பெண், கைக்காசு செலவழிக்காமல் வெளிநாடு செல்லப் போகிறாளா? அவள் குடும்பத்திலேயே யாரும் தமிழ்நாட்டு எல்லையைத் தாண்டியதில்லை. அவள் மாமனார் மட்டும் தருமபுர ஆதீன மடத்து ஆலையில் கடைசி நாட்களைக் காசியில், தம்பிரான் மடத்தில் வானப்ரஸ்தமாகக் கழித்தார். புவனா உண்மையிலேயே அதிர்ஷ்டசாலிதானா? "ஏங்க, நம்ம ஊருக்கு ப்ளேன் வராதே. அதில் ஏற பட்டணமில்லே போகணும்?"

"ஆமா, என்னைப் பட்டணத்து வரை சந்திரசேகரையும், புவனாவையும் ட்ரெயினில் அழைத்துச் சென்று ப்ளேன் ஏத்தும்படி எழுதியிருக்கான்... நமக்கெல்லாம்தான் வாய்ப்பிருந்ததில்லே... குழந்தை போய் வரட்டும்..."

இப்போது ஞானத்துக்கு ஒரு மாதிரி இருந்தது. சந்திரசேகரையும், புவனாவையும் ப்ளேனில் சேர்த்து அனுப்புவதாவது?

அவள் மனத்தைப் புரிந்து கொண்டது போல் சுந்தரம் சொன்னார். "சேகரோட சேர்ந்து போறதிலே எந்தத் தப்புமில்லே, ஞானம். கிருஷ்ணன் எனக்குச் சொந்த அண்ணன் மாதிரி. சேகரும் சின்னப்பிள்ளை... இன்னும் ஸ்கூல் படிப்பே முடியவில்லே. சித்தப்பா, பெரியப்பா குழந்தைங்க லீவுக்குச் சேர்ந்து போறதில்லையா...?"

"அதுக்கில்லேங்க... ப்ளேனிலே..."

"ப்ளேனிலே என்ன ரெண்டு பேரும் தனியாவா உட்கார்ந்திருக்கப் போறாங்க? டவுன் பஸ்ஸைவிட ப்ளேன் நாலு பங்கு பெரிசாயிருக்கும். மெட்ராஸில நான் ஏத்தி விடப் போறேன். அப்புறம், விமானத்திலே, நூறு இருநூறு பேரோட சேர்ந்து பிரயாணம் செய்யப் போறாங்க. குவெய்த்தில் இறங்கினதும் கிருஷ்ணனும், அவன் சம்சாரமும் கவனிச்சுப்பாங்க. அவங்க நம்மை விட விவரமும், நாகரிகமும் தெரிஞ்சவங்க... நல்லாவே பார்த்துப்பாங்க..."

"அதெல்லாம் சரிதான். ஆனா ஊர்லே ஏதாவது சொல்லுவாங்களோ?"

"யாரு என்னத்தைச் சொல்லுவாங்க? தப்புத் தண்டா செய்தாப் பேசணும்... நம்ம குழந்தையை, நம்ம மனுஷங்க வீட்டுக்கு விடுமுறைக்கு அனுப்ப யாரைக் கேட்கணும்?"

"அதுவும் சரிதான்... நீங்க இப்ப கிளம்புங்க... சாயங்காலம் வந்து யோசிக்கலாம்..."

சுந்தரம் சைக்கிளை படியிறக்கினார்...

தெரு முனையில் சேகர் வேக வேகமாக சைக்கிளை மிதித்தபடி வந்தான். அவன் முகத்தில் தெரிந்த மகிழ்ச்சியும், கண்களில் தெரிந்த பளபளப்பும், பல விஷயங்களை உணர்த்தின.

"என்ன சேகர், அப்பர்விடமிருந்து லெட்டர் வந்ததா?"

"உங்களுக்கு எப்படி ஸார் தெரியும்? போஸ்ட்மேன் சொன்னாரா?". அப்பா எழுதியிருக்கார் ஸார், ஸம்மர் ஹாலிடேயில் நான் பரீட்சைக்குப் படிக்கணுமாம். ஸ்காலஸ்டிக் ஆப்டிட்யூட் டெஸ்டெல்லாம் எழுதினால்தான் அமெரிக்க யூனிவர்ஸிடியில் இடம் தருவாளாம்..."

கிருஷ்ணன் அவரவர்களுக்குச் சம்பந்தப்பட்ட விஷயத்தை மட்டும்தான் எழுதியிருக்கிறார் போலிருக்கிறது. "அப்படீன்னா, உங்க அப்பா உன்னைக் காலேஜ் படிப்புக்கு அமெரிக்காவில் சேர்க்கிறது என்று நிச்சயம் செய்து விட்டானாக்கும்..." பள்ளி போகும் வழியில் சுந்தரம் கேட்டார்.

"ஆமாம் ஸார். அப்பா எழுதியிருக்கார். நம்ம நாட்டில் காலேஜ் படிப்பு அவருக்குத் திருப்தியாக இல்லையாம். அறிவை விஸ்தீரணப்படுத்துவதற்காக மட்டும் பெற வேண்





ஆசிரியர்: கற்க கசடற என்ற குறளுக்குப் பொருள் என்ன?

மாணவன்: குற்றமறப் படிக்க வேண்டும். பின்பு படிப்புக்குத் தகுந்தபடி வேலைக்காகக் காத்து நிற்க வேண்டும்.

— கடுவை கோபால்சாமி

டிய கல்லூரிப் படிப்பு வெறும் வேலை வாய்ப்புச் சாதனமாகிவிட்டதால், கல்லூரிப் படிப்பு இங்கே கௌரவமற்றதாகி இருக்கிறதாம். நம் கல்லூரிகள் இன்னும் விளிம்பைத் தொட்டுப் பார்த்து மகிழும் கட்டத்தில் இருக்கின்றனவே தவிர, ஆழத்தை உணரும் முயற்சியில் இறங்கவில்லை. அப்படின்னு எழுதியிருக்கார்...''

''என்னிடம் கூட அதைத்தான் கிருஷ்ணன் சொன்னான். அடிப்படைக் கணிப்புகளைப் பெற எனக்கு இந்தியக் கலாசாரம் அவசியம்னு படறது. ஆனால் அறிவைப் பெருக்கிக் கொள்ள, மேனாட்டு வேகமும், தணியாத ஆர்வமும் தேவைன்னு. நான் மேல்நாடெல்லாம் போனவனில்லை. ஆனா இங்கே என்ன நடக்கறதுன்னு பார்க்கிறேனே... சிவகாமி அத்தை பிள்ளை நித்தியானைப் பாரு. பி. ஏ. எகனாமிக்ஸ் படிக்கிறான் மெட்றாஸிலே. போனவருஷமே முடிஞ்சிருக்க வேணும் படிப்பு. இன்னும் பரீட்சையே துவங்கலை... மொழிப் பிரச்னை, அயல் நாட்டுப் பிரச்னைன்னு எதையோ ஒரு சாக்கை வைத்து அரசியல்வாதிங்க பசங்களைத் தூண்டறாங்க. இவங்களுக்கும் இருக்கிற நேரத்துக்குப் போதிய வேலையில்லாததால், கொடி தூக்கிக் கல்லடி பட்டு, சினிமா நடிகளுக்கு வால் பிடித்து, கற்பூரம் காட்டி, பஸ்ஸைக் கொளுத்திண்டு, ஏதோ இலக்குத் தெரியாம ஓடறாங்க... இத்தனை வெளி விஷயங்களும் முடிந்த பிறகு படிப்புக்கு அவங்க என்ன நேரம் ஒதுக்க முடியும்? இல்லை, இவ்வளவு பரபரப்பான வாழ்க்கையிலே, சுவாரஸ்யமே இல்லாத படிப்பு எத்தகைய மனப்பாதிப்பை ஊக்குவிக்கும்? வாய்ப்புக் கிடைச்சா நீ அமெரிக்காவிலேயே போய்ப் படி. உழைப்போட அவசியம் அப்பத்தான் புரியும்... ஒருமுனைப்பட்ட ஈடுபாடு இல்லாமல் எதிலும் சிறக்க முடியாது...''

இருவரும் பள்ளிக்குள் நுழையும் போது ப்யூன் மரத்தில் வட்டமாகத் தொங்கிய பித்தளை மணியில் டண் டண் என்று அடிக்கத் துவங்கினான்.

ஞானம் சிந்தனையுடன் உள்ளே திரும்ப, லோகேஸ்வரி எதிரே வந்தாள். ''ஏம்மா, புவனாவை அந்தச் சந்திரசேகரனோட ப்ளேன்ல ஏத்தி அனுப்பப் போறீங்களா?'' என்றாள் படபடப்புடன்.

''எனக்கே ஒண்ணும் புரியலை லோகு... அவங்க அப்பா கைப்பணம் போட்டு டிக்கெட் எடுத்து அனுப்பியிருக்காரு... அனுப்ப மாட்டோம்னு சொல்றது நல்லா இருக்காது... உங்கப்பாவும் சரிங்கறார்.''

லோகேஸ்வரியின் கண்களில் கண்ணீர் தளும்பியது... ''ஆமா.... அவ அதிர்ஷ்ட நட்சத்திரத்திலே பொறந்திருக்கா... என்னைப் போல அவல நேரத்திலே பொறக்கல்லியே...''

அவள் துக்கம் ஞானத்திற்கு வருத்தத்தைத் தந்தது. ''அப்படியெல்லாம் பேசாதே லோகு. உன் அதிர்ஷ்டத்துக்கென்ன கொறைவு? நித்தியானந்தம் படிப்பை முடிச்சிட்டு, ஒரு வேலையும் பார்த்துட்டான்னா, உன்னைக் கட்டிக்கிட்டு, ஜாம் ஜாம்னு வச்சுப்பான்.''

''ஆமா... அத்தைக்கு மீசை மொளைச்சு சித்தப்பாவாற போது பாத்துக்கலாம். இப்போ எனக்குக் கதி இந்தச் சமையலும், கரியும்தான்...''

ஞானத்திற்கு அவளைப் பார்க்கப் பாவமாக இருந்தது. உள்ளூரில் காலேஜ் இருந்திருந்தால் மேலே படிக்க வைத்திருக்கலாம். அடுத்த ஊரில் உள்ள காலேஜோ ஆண் பிள்ளைகளுடன் சேர்ந்து படிக்கும் காலேஜ். நாத்தி அதற்குச் சம்மதிக்க மாட்டாள். இவளும் இரண்டாண்டு காலமாக வீட்டில் உட்கார்ந்து உட்கார்ந்தே அலுத்து சலித்திருக்கிறாள். யோசித்துப் பார்த்தால் பட்டணத்திலிருப்பது போல வீட்டு வேலைக்கு மெஷினெல்லாம் கிராமங்களில் இல்லாமலிருப்பது நல்லதுபோலிருக்கு... அப்படியிருந்தால் ஒரு மணியில் அரக்கப் பரக்கச் சமைத்து வைத்துவிட்டு நாள் முழுக்கக் கொட்டு, கொட்டுன்னு முழிச்சிண்டு இருக்கணும்... இப்போ, மாவாட்டறதிலேயும், வெந்நீர் அடுப்பு மூட்டறதிலேயும்னு நேரம் போகிறது.

லோகேஸ்வரியின் முன்னுச்சியை மெல்ல நீவி விட்டாள். அவள் திடீரெனத் தாயின் மடியில் விழுந்து குலுங்கிக் குலுங்கி அழத் துவங்கினாள். ஞானத்தால் அவள் ஆற்றாமையைப் புரிந்து கொள்ள முடிந்தது. பருவ ஏக்கம், பெற்றோர் வீட்டிலேயே மனத்தளவில் ஏற்படுத்தும் தனிமை உணர்வு இதெல்லாம் அந்த வயதைக் கடந்திருந்த அவளுக்குப் புரிந்தது.

லோகுவுக்குக் கூடிய சீக்கிரத்தில் திருமணம் செய்து வைக்க வேண்டும். இல்லா

விட்டால் சிறகொடிந்த பறவை, சின்ன முற்றத்தில் தத்தித் தத்திக் கீழே விழுவது போல் இந்த வீட்டைச் சுற்றிச் சுற்றியே அவள் ஏங்கித் துவளுவாள்...

''வணக்கம், வாத்யார் ஊட்டம்மா...''

முதலில் திடுக்கிட்டு எழுந்தவள் லோகுதான். புடைவையைச் சரி செய்து கொண்டு கதவின் பின்புறம் நின்றாள்.

''வாங்க அண்ணாச்சி வாங்க... ஞானம் பவ்யமாகக் கைகூப்பினாள்.

''எங்கே வாத்யாரு? ஸ்கூலுக்குக் கௌம்பியாச்சா? இந்தாம்மா பாப்பா, பழமெல்லாம் வாங்கி உள்ளே வை. என்ன வெக்கம். கதவு மறைவிலே ஒளிஞ்சுக்கறே. மேடையிலே மட்டும் ஜம்முனு தைரியமாப் பாடறே...''

''இது அந்தப் பாப்பா, அதான் புவனேஸ்வரி இல்லீங்க... இவ பெரிய மக... சின்னவ ஸ்கூலுக்குப் போயிருக்கா...''

''அதானே பார்த்தேன்... ரெண்டே மாசத்திலே இப்படி வளர்ந்துட்டாளேன்னு... இந்தாங்க பழத்தை எடுத்து உள்ளே வையுங்க...''

ஞானம் பழங்களை எடுத்து உள்ளே வைத்துவிட்டு வந்து பவ்யமாக அவர்களெதிரில் நின்றாள்... ''சொல்லுங்க.''

''இவரு யாரு தெரியிதுங்களா?'' தமிழ்ச் செல்வன் தம்முடன் வந்திருந்த நபரைக் காட்டிக் கேட்க, ஞானம் தலை அசைத்தாள்.

''தெரிஞ்சிருக்காது. இவரு மெட்ராஸில நம்ம கட்சியிலே பெரிய ஆளு... நம்ம தலைவரே இவர் நில்லுன்னா, நிப்பாரு, உட்காருன்னா உட்காருவாரு... நம்ம ஊர் கணபதி பிள்ளைக்கு நிலக் கிரயமெல்லாம் இவரால்தான் தகராறில்லாம முடிஞ்சுது. நேரே பிள்ளைவாளைக் கூட்டிக்கிட்டு, அக்ரிகல்சுரல் மினிஸ்டர் வரை போயிட்டாரு... தமிழ்ச்செல்வன் ஏதோ பேச, கூட வந்தவர் முக்கியமானவர் என்பது மட்டும் புரிந்தது.

''மே மாசத்துலே மெட்ராஸிலே பெரிய இலக்கிய விழா நடத்தப் போறோம். சங்கத் தமிழ் காலத்திலேயிருந்து புதுக்கவிதைக் காலம் வரையிலும் தமிழ் வளர்ச்சிக்கு நம்ம தலைவர் என்ன செய்திருக்கார்னு வெளிச்சம் போடற மாதிரி விழா... விழான்னா, இனிமே அந்தமாதிரி விழா கிடையாதுங்கறப்பல இருக்கும்... மாலை கட்டவே, தஞ்சாவூர்லேயிருந்து நூறு பேர் போறாங்க..... உங்க மகளை நல்லாப் பாட்டெல்லாம் தயார் செய்துக்கச் சொல்லுங்க... அன்னிக்குப் புஸ்தகம் தந்தேனில்ல, அதுலே இரண்டாம் பாகமும் அனுப்பறேன்... ஒவ்வொரு சங்கப் பலகைக்கும் ஆரம்பப் பாடல் பாப்பாதான்... பதினஞ்சு நாள் மெட்ராஸ்லே தங்க ஏற்பாடெல்லாம் நாங்க பார்த்துப்போம்...''

''அது ரொம்பச் சின்னப் பொண்ணுங்க. இதுநாள் வரை ஊரை விட்டே தனியா வெளியே போனதில்லே.''

''தனியா யாரு வரச் சொன்னா! தாய்க்குலம் நீங்க அழைச்சிட்டு வர்றீங்க...''

''நானா?''

''ஆமாங்க. தாய்க்குலத்துக்குத் தனியா ரெண்டு வேளை விழா எடுக்கறாங்க... என் வீட்டுக்காரிதான் அந்த ஏற்பாடெல்லாம் கவனிச்சுக்கறா... நம்ம ஊர்க்காரப் பெண்களும் கொடி பிடிச்சு வருவாங்க... நீங்க கவலையே பட வேணாம்... முன்னாடியே சொல்றது எதுக்குன்னா, நீங்க கொழந்தையைத் தயார் செய்யணுமில்லையா... அட்வான்ஸ் இந்தாங்க...''

''இல்லீங்க... வாணாம்... பாப்பா அவங்க அப்பா வரட்டும், கேட்டுச் சொல்றேன்..''

''வாத்யாரையா சுபாவம் தெரிஞ்சு தானே அவரில்லாத நேரமா வந்தேன்... அவர் ஒங்களை மாதிரி இல்லீங்க.... எதிலேயும், சந்தேகம், தயக்கம்... நீங்க நாசூக்கா எடுத்துச் சொல்லுங்க... இந்தாங்க அட்வான்ஸ் பணம்...''

''இப்ப வேணாங்க...''

''சரி, அட்வான்ஸ் இல்லே இது. பாப்பாவுக்கு டிரெஸ் தைக்க முன் பணம்... வாங்கிக்குங்க...''

நான்கு நூறு ரூபாய்த் தாள்கள் அவள் பார்வையில் படபடக்க, பத்து ரூபாய்க்கே ஆயிரம் கணக்குப் பார்க்க வேண்டிய நிலையிலிருந்தவள் கைநீட்டிப் பெற்றுக் கொண்டாள்.

கை நடுங்கியது, நெஞ்சு படபடத்தது. தலை கனத்தது. பேச்சு குழறியது. அதோடு சந்தோஷமும் ஏதோ ஒரு மூலையில் பூவாய்ப் பூத்தது.

(தொடரும்)



''என்னடா உம் பொண்ணுக்குச் 'சிந்து பைரவி'ன்னு பேர் வெச்சிருக்கே, சினிமா மோகமா?''

''அதெல்லாம் ஒரு இழவுமில்லே. எப்போப் பார் ஜலதோஷம். மூக்கைச் சிந்திக்கிட்டேயிருக்கு.

— கோபாலி



**வாசகர் தீர்ப்பு:**

| | |
|---|---|
| எம். ஜி. ஆர். பதவி விலக வேண்டும்! | 58% |
| எம். ஜி. ஆர். பதவியில் நீடிக்க வேண்டும்! | 42% |

**எம். ஜி. ஆர். பதவி விலக வேண்டும்!**
**முதல் பரிசு வாதம்;**

தமிழகம் என்னும் படகை ஆட்சி என்னும் துடுப்பினால் செலுத்த வேண்டிய படகோட்டியாகிய எம். ஜி. ஆர்., அப்பொறுப்பை சரிவரச் செய்யவில்லை. மேலும் தமிழகப் படகு, அதிகார துஷ்பிரயோகம், லஞ்சம், மதுவிலக்கு ரத்து, வேலையில்லாத் திண்டாட்டம், சட்டம் ஒழுங்கு சீர்குலைவு போன்ற ஓட்டைகளால் மூழ்கும் நிலையில் தத்தளிக்கிறது. இந்நிலையில் படகைச் சரிவரச் செலுத்துகிறவலிமையற்றஎம்.ஜி.ஆர்., அடுத்தவர் படகோட்டியாக வாய்ப்பளிக்கும் பொருட்டுப் பதவி விலகுதல் அவசியமாகும்.

எம். ஜி. ஆர். அரசு பொறுப்பேற்ற பின்னர் முறைகேடுகள் மலிந்து விட்டன. தமிழகத்திற்கு வரவேண்டிய பல நல்ல தொழில் வாய்ப்புகள் நழுவ விடப்பட்டன. நீதி, நிர்வாகம் என்பது கேலிக்குரியதாகிவிட்டது. எக்காரியத்தை அரசு மேற்கொண்டாலும் அதனைச் செம்மையுறச் செய்வதென்பது இயலாத ஒன்றாகிவிட்டது.

எம். ஜி. ஆர். அரசு, தேர்தல் வாக்குறுதிகளை அறவே மறந்துவிட்டது. மது விலக்கை ரத்து செய்ய மாட்டேன் என்று தம் அன்னையின் மீது சத்தியம் செய்து ஆட்சியை அமைத்தவர், இன்று மதுவினால் தமிழகத்தையே தள்ளாட வைத்துவிட்டார். தாய்க்குலத்தையும் கண்ணீரில் மிதக்க விட்டார்.

குழந்தைகள் சத்துணவுத் திட்டம் என்ற பெயரால் ஆண்டொன்றுக்கு 150 கோடி ரூபாய்க்கு மேல் செலவிடப்படுகிறது. இத்திட்டத்தின் மூலம் முழுப்பயனை அடைபவர்கள் குழந்தைகளல்ல என்பது நிதர்சனமான உண்மை. இத்தொகையை தொழிற்சாலைகளில் முதலீடு செய்தால் தமிழகத்தின் வருங்காலமாவது ஒளிமயமாகும்.

லஞ்ச ஊழலோ அங்கிங்கெனாதபடி எங்கும் நிறைந்திருக்கிறது. இதனால் அன்று சாதாரணமாக நடந்து சென்ற ஆளுங்கட்சியினர், இன்று காரிலும் பிற வாகனங்களிலும் பறந்து செல்கின்றனர். தமிழக மக்களின் வசதிகளைப் பெருக்கத் தவறிய அரசு காரணமாக, அரசியல்வாதிகள் தங்கள் வசதிகளைப் பெருக்கியுள்ளனர். இன்றைய அரசின் போக்கு, அரசு ஊழியர், ஆசிரியர், விவசாயி, வியாபாரி, தொழிலாளி, மாணவர் உள்ளிட்ட அனைவருமே ஏதாவதொரு பிரச்னையைச் சந்தித்த வண்ணமே வாழும்படி செய்கிறது. இன்றைய எம். ஜி. ஆர். அரசு செயலிழந்த அரசு என்பதற்கு, 'அரசு பைல்கள் ஆமையைவிட மெதுவாக நகருகின்றன' என்று நிதியமைச்சர் நெடுஞ்செழியனே ஒப்புதல் அளித்துள்ளார். எனவே தமிழகத்தின் நலனை முன்னிட்டு 'எம். ஜி. ஆர். பதவி விலக வேண்டும்' என்பது காலத்தின் தேவையாகும்.

— எம். நடராஜ், விழுப்புரம் — 2.

எம். ஜி. ஆர். தாம் நடித்த பெரும்பான்மையான படங்களில் தாம் எப்பொழுதும் தர்மத்திற்காகவும், தாய்க்குலத்தின் மானம் காக்கும் காவலனாகவும் வாழ்வது போல் நடித்துத் தமக்கென்று ஓர் இமேஜ் ஏற்படுத்திக் கொண்டதும், அந்த இமேஜைத் தமது அரசியல் வாழ்வுக்காகப் பயன்படுத்திக் கொண்டதும் நாமறிந்த உண்மை. சினிமா வேறு, வாழ்க்கை நடைமுறை வேறு என்பதைத் தமது சொற்களாலும், மனைவி இறந்து மாதம் மூன்று கூட கழியாத நிலையில் மறுமணம் செய்து கொள்ளத் துணிந்த நடிகருக்கு ஆதரவு கொடுத்துத் திருமணத்துக்குத் தலைமை தாங்குவது போன்ற செய்கைகளாலும் நிரூபித்துள்ளார். தமது கட்சியிலேயே சிறந்த நிர்வாகத்திறமையுள்ள, வயதில் சிறியவர்கள் இருக்கிறார்கள் என்பது எம். ஜி. ஆருக்குத் தெரியும். அப்படிப்பட்ட திறமைசாலியிடம் ஆட்சியை ஒப்படைத்துவிட்டு, அ. தி. மு. க. கட்சியின் ஏகோபித்த கட்சித் தலைவராக மட்டும் இருந்து கொண்டு, உண்மையாகவே தமிழகத்தை முன்னுக்குக் கொண்டு வர முடியும்.

— பி. தியாகராஜன், சென்னை — 2.

சில மாதங்களுக்கு முன் செய்திப் பத்திரிகையில் ஒரு விளம்பரம் வந்திருந்தது : ஆட்சியிலோ, வேறெதிலுமோ தாம் யாருடைய குறுக்கீட்டையோ, இடையூறையோ விரும்பவில்லை என்றும், தம்முடைய மனைவியே ஆனாலும் தம்முடைய (முதல்வருடைய) சம்மதத்தைப் பெறாமல் எந்தச் செயலையும்செய்யக்கூடாதுஎன்றும்; அமைச்சர்களோ, அதிகாரிகளோ தம் உத்தரவின்றி எதையும் செய்யக் கூடாது என்றும் முதல்வரது கையெழுத்துடன் அந்த விளம்பரம் வெளிவந்தது. இத்தனை காலமாக இல்லாமல் இப்போது மட்டும் ஏன் இப்படி விளம்பரம் வெளிவர வேண்டும்? இது முதல்

# எம்.ஜி.ஆர். என்ன செய்ய வேண்டும்?

வரின் சுகவீனத்தைத்தானே காட்டுகிறது?

எம். ஜி. ஆர். நல்ல பேச்சாற்றல், செயல் திறனுடன் இருந்தபோது, அ. தி. மு. க. மந்திரிகள் ஒருவரை ஒருவர் தாக்கி அறிக்கை வெளியிடுவது போன்ற ஒரு நிலை உண்டாக வில்லை. இப்போது யாரையும் கட்டுப்படுத்த முடியாத அளவுக்கு உடல்நிலை பாதிக்கப் பட்டுள்ளார். எனவே, எம். ஜி. ஆர். பதவி விலக வேண்டும். அல்லது தமக்கு அடுத்த படியாக ஒரு வாரிசைத் தேர்ந்தெடுத்து அவருக்குத் துணை முதல்வர் என்ற பதவியை யும் பெரும்பாலான பொறுப்புக்களையும் கொடுத்து விட்டுத் தாம் முதல்வராகவே இருக்கலாம்.

— கே. வெங்கடாசலம், காரைக்குடி — 3.

அரசாங்க ஊழியர்கள் ஒரு குறிப்பிட்ட வயதில் ஓய்வு பெற வேண்டும் என்று விதி வைத்திருக்கிறார்கள் — ஏன்? அந்த வயதிற்கு மேல் திறமையாகச் செயல்படும் ஆற்றல் குறைந்துவிடும். கடுமையாக முப்பது ஆண்டு களுக்கு மேல் உழைத்தவர்களுக்கு ஓய்வு தேவை என்பதால்தானே? அதிலும் நமது முதல்வர் கடுமையாக நோய்வாய்ப்பட்டு, பின்பு, தீவிர சிகிச்சைக்குப் பின், தேறி யிருப்பவர். அவரால் எப்படித் திறமையாக, சுறுசுறுப்பாகச் செயல்பட முடியும்? எம். ஜி. ஆர். ஒருவருக்காகத்தான் மக்கள் ஓட்டுப் போடுகிறார்கள் என்பதிலும், அ.தி. மு.க. கட்சியே எம்.ஜி. ஆர். ஒருவரால்தான் செல்வாக்குப் பெற்றிருக்கிறது என்பதிலும் யாருக்கும் எள்ளளவும் சந்தேகம் இல்லை. தாங்கள் 'பூஜ்ஜியங்கள்'தான் என்பதை அமைச்சர்கள் பலரும் ஒப்புக் கொள்கிறார் களே! எனவே தம் வாரிசு ஒருவரை முதல்வ ராக நியமித்துவிட்டு, கௌரவ ஆலோசக ராக இருப்பதால், அவருடைய செல்வாக்கு நிச்சயம் குறையாது. மாறாக, எம். ஜி. ஆரின் செல்வாக்கு கூடும்.

— எஸ். ஆர். இந்திரன், மன்னார்குடி — 1.

திரைப்பட நடிகை 'வெண்ணிற ஆடை' நிர்மலாவுக்கு மேலவை உறுப்பினர் பதவி அளிக்க நடத்திய நாடகம்; அது முடியாமல் போக, அவசரக்கோலத்தில் மேலவையையே கலைத்த விதம் — இவை பெருமைப்படும்படி யாக இல்லை. எல்லா அபத்தங்களுக்கும் சிகரம் வைத்தாற்போல், சமீபத்தில் மதுரை மாநகரில் நடைபெற்ற மாநாட்டில் தமது இயக்கத்தினைச் சார்ந்துள்ள தொண்டர்கள் அனைவரும் கத்தி வைத்துக்கொள்ள வேண்டு மென ஆணையிட்டதனை நோக்கும் போது, தமிழக அரசியல் எங்கு சென்று கொண் டிருக்கிறது என்று கேட்கத் தோன்றுகிறது. எனவே முதல்வர் தமது உடல்நிலையைக் கருத்தில் கொண்டும், தமிழ்நாட்டின் நலனை முன்னிட்டும் பதவி விலக வேண்டும்.

— பூ. இராஜா, சூலூர்.

உடல்நிலை சரியில்லை என்பது ஒருபுற மிருக்க அதனாலேயே கட்சியைத் தம் கட்டுப் பாட்டின் கீழ் கொண்டு வர அவரால் முடிய வில்லை. எந்தத் துறையை யாரிடம் ஒப்ப டைப்பது எனத் தெரியாமல் பதவியைப் பறிப்பதும் கொடுப்பதும்... இது பணிகள் நடக்க ஒரு தடையாக இருக்கிறது! வோட்டு கள் வேண்டும் என்ற ஒரே குறிக்கோளுக் காகப் பாமர மக்களின் பலவீனங்களைப் பயன்படுத்தித் தேவையில்லாத இலவச திட் டங்களை அமல்படுத்துதல்... இதுபோன்ற பல காரணங்களால் எம். ஜி. ஆர். ஆட்சிப் பொறுப்பைத் தகுதியானவர்களிடம் கொடுத்து விட்டு ஆட்சியிலிருந்து விலக வேண்டும்!

— பொ. சு. சேஷாத்திரி, தஞ்சை — 1.

**எம். ஜி. ஆர். பதவியில் நீடிக்க வேண்டும்!**

**முதல் பரிசு வாதம்:**

**1. எம். ஜி. ஆர். என்ற மூன்றெழுத்தைத் தான் மக்கள் தங்களின் நம்பிக்கையின் சின்ன மாகக் கருதுகின்றனர். மேலும் அவரது அடித்தள மனத்தில் அமைந்துள்ள குணங்களான நல்ல ஒழுக்கம், பெரியோர் களை மதித்தல், எளியவர்களுக்குத் தன்னாலான உதவிகளைச் செய்தல் போன்றவை அவரது திரைப்படங்களில் மட்டுமின்றி ஆட்சிக் காலத் தொடக்கத்திலிருந்து இன்று வரை நீடித்து, அதனால் தமிழக மக்கள் அனைவரும் பயன்பெற்று வருகிறார்கள்.**

**2. எம்.ஜி.ஆர். சமீப காலத்திற்கு முன்பு உடல்நிலை குன்றிய சமயம், அவர் உயிர் வாழ்ந்துதான் ஆக வேண்டும், ஆட்சி யில் நீடித்துத்தான் ஆக வேண்டும் என்ற கருத்து, தமிழக மக்கள் அனைவரது மனத் திலும் இருந்தது. எல்லோரும் அதற்காகப் பிரார்த்தித்தார்கள். 33 பேர் தீக் குளிக்கவும் செய்தார்கள்!**

**3. எம். ஜி. ஆர். அண்ணா தி. மு. க.வை ஆரம்பித்துப் பதினைந்து ஆண்டு நிறையும் இக்காலத்திலும் அவரது வாரிசு, அதாவது அவருக்கு நிகரானவர் யார் என்பதை அறிய இயலவில்லை. வேறு எந்த ஒரு அமைச்சர் அவரது இடத்திற்கு வந்தாலும், அவரைப் போல் தமிழகத்தின் பிரச்னைகளைச் சமாளிக் கவும், சீரான நிர்வாகத்தை நடத்தவும் முடி**

யாது.

4. எம். ஜி. ஆர். அரசாட்சியில் காலடி எடுத்து வைத்த பின்பு, அரிசிப் பஞ்சம் என்ற அரக்கன் ஒழிந்தான். பள்ளி மாணவர்கள் முதல் முதியோர்கள் வரை இலவசச் சத்துணவு வழங்கியது, சீருடைகள் மற்றும் சேலை, வேஷ்டிகளை ஏழை முதியோர்க்கு வழங்கியது; தொழு நோயாளிகள், ஊனமுற்றோர்கள், தள்ளாத முதியோர்கள் ஆகியவர்களுக்கு இலவச பஸ் பிரயாணம், வழங்கியது; குடிசைகளை அகற்றிக் குறைந்த வாடகையில் ஏழைகளுக்கு வீடுகள் வழங்கியது; நடுத்தர மக்களுக்கும், உயர்மட்ட மக்களுக்கும்கூட வீட்டுவசதி செய்து கொடுத்தது எல்லாம் பெரிய சாதனைகளாகும். மாவட்டங்களின் நிர்வாகச் சீர்கேடுகளை மாற்ற, அவற்றைப் பலவாகப்பிரித்ததும் அவர் தமிழகத்தை மற்ற மாநிலங்களைவிட முன்னேற்றப் பாடுபடுகிறார் என்பதற்கு ஓர் அத்தாட்சியாகும்.

5. எம். ஜி. ஆர். தானே நின்று கவனித்து ஒவ்வொன்றையும் செயலாக்க வேண்டும் என்று நினைக்கிறார். அதனால்தான் எல்லாத் திட்டங்களும் நிறைவேறத் தாமதமும், கோப்புகள் நகரத் தாமதமும் ஏற்படுகிறது. அதே நேரத்தில் அவர் மத்திய அரசுடன் இணைந்த கருத்தொற்றுமையுடன் தமிழகத்தில் ஆட்சி நடத்தி வருவதைக் காண்கிறோம். எனவே எம். ஜி. ஆர். தமது பதவியை விட்டு விலக வேண்டுமா என்ற கேள்விக்கே இடமில்லை.

— டி. என். வாசுதேவன், சென்னை — 2.

இந்தியாவில் இன்றிருக்கும் மாநிலங்கள் இருபத்தி மூன்று. ஆனால் இருக்கும் உன்னதமான முதல்வர்கள் இரண்டே பேர்தான். ஒருவர் ராமகிருஷ்ண ஹெக்டே. மற்றவர் எம்.ஜி.ஆர். இந்தப் பெருமையையும் தமிழகத்தை இழக்கச் சொல்கிறீர்களா?

— ஆழ்வாரப்பன், குன்னூர் — 1.

ஒரு மாநில முதல்வர் பதவி விலக வேண்டும் என்ற கோரிக்கை எழுமேயானால், அதன் பின்னணியில் வலுவான சில காரணங்கள் இருக்க வேண்டும். நல்வாழ்வுத் திட்டங்களின்மை, நிர்வாகத் திறமையின்மை, சட்டம் ஒழுங்குச் சீர்குலைவு, தொழில் அமைதியின்மை, நிரூபிக்கப்பட்ட லஞ்ச ஊழல் குற்றச் சாட்டு, மக்கள் நம்பிக்கையை இழத்தல் போன்ற காரணங்களுக்காகப் பதவி விலகக் கோரினால் நியாயமுண்டு. இதன் அடிப்படையில்' ஆராய்ந்தால், 'எம்.ஜி.ஆர். பதவியில் நீடிக்க வேண்டும்' என்ற முடிவுக்கே எல்லோரும் வருவர்.

— கு. கணேசன், சென்னை — 15.

ஒரு குடும்பத்தைத் தலைவன்தான் கஷ்டங்களுக்கும், நஷ்டங்களுக்கும் ஈடுகொடுத்துப் பொறுப்புடன் சரியான பாதையில் நடத்திச் செல்ல வேண்டும். அவனுக்கு மூப்பு வரும் போது தனது பொறுப்புக்களைத் தன் வாரிசிடம் கொடுக்கிறான். அந்தக் குடும்பம் நன்றாக நடப்பதும் கெட்டுப் போவதும் அந்த வாரிசிடம்தான் உள்ளது. சில குடும்பங்களில் சரியான வாரிசு இல்லாவிட்டால் தலைவனே, தனது மூப்பையும், பிணியையும் பொருட்படுத்தாமல் 'நான் உயிரோடு இருக்கும் வரை இந்தக் குடும்பத்தைச் செவ்வனே நடத்துகிறேன். அதற்குப் பிறகு யார் வேண்டுமானாலும் பார்த்துக் கொள்ளுங்கள்' என்று கூறிக் கொண்டு, குடும்பப் பொறுப்பைத் தொடர்ந்து நடத்துவதை நாம் கண்கூடாகப் பார்க்கிறோம். அத்தகைய நிலையில்தான் இன்று எம். ஜி. ஆர். இருக்கிறார். எம். ஜி. ஆர். அளவுக்கு மக்களிடையே செல்வாக்கும், leadership quality யும், அவர் குழுவில் வேறு யாருக்கும் இல்லாத காரணத்தால் தான் தொடர்ந்து அவரே பதவியில் நீடிக்க வேண்டிய நிர்ப்பந்தம் இருக்கிறது. அவருக்குப் பிறகு, தமிழகத்தின் தலையெழுத்தைப் பொதுமக்கள் தேர்தலின் மூலம் நிர்ணயிக்கட்டும்.

— ஆர். சுந்தரராஜன், மதுரை — 1.

அவ்வப்போது தோன்றும் சோர்வு, சாதாரணமாக எல்லோருக்கும் ஏற்படக் கூடிய ஒன்றே. இருநூறு மீட்டர் ஓடியபின் பி. டி. உஷா கூடத்தான், அசதியுடன் மேல் மூச்சு வாங்க, மைதானத்திலேயே கால்களை நீட்டிக் கொண்டு அமர்ந்து விடுகிறார். அவர் உடல்நிலை ஆரோக்கியமானதல்ல என்பதா பொருள்? ஜனநாயகத்தில் பெரும்பான்மையான வாக்குகளைப் பெற்றவரே பதவியில் இருக்க வேண்டும். அப்படி, பெரும்பான்மையான வாக்குகளைப் பெற்றுள்ள எம்.ஜி. ஆர். (அவ்வளவு வாக்குகளும் எம். ஜி. ஆர். என்ற தனி மனிதருக்கே அளிக்கப்பட்டவை என்பதை அனைவரும் அறிவர்) ஏன் பதவி விலக வேண்டும்?

— பி. ஆர். ஸ்ரீனிவாசன், வேலூர் — 2.

மக்கள் தலைவர் எம். ஜி. ஆர். பதவி விலக வேண்டுமா அல்லது பதவியில் நீடிக்க வேண்டுமா என்பதை முடிவு செய்யும் பொறுப்பு மக்கள் மன்றத்தைச் சேர்ந்ததே அன்றி அது பத்திரிகைகளின் வேலை அல்ல. பத்திரிகைகளின் கணிப்பு எப்பொழுதுமே சரியாக இருக்கும் என்று சொல்ல இயலாது. கடந்த தேர்தலில் 'ஆண்டிப்பட்டி தொகுதியில்' மக்கள் தலைவர் எம். ஜி. ஆர். வேட்பாளராகப் போட்டியிடுகையில் அவர் இருந்தது 'அமெரிக்க ஆஸ்பத்திரியில்.' இன்று பத்திரிகைகள் சொல்லும் கருத்துக்கள் அன்று தமிழகமெங்கும் எதிர்க்கட்சி மேடைகளில் பேசப்பட்டன. இருந்தும் ஆண்டிப்பட்டி தொகுதி இன்றைய பத்திரிகைகளின் கருத்தை அன்றே புறக்கணித்துவிட்டது. தேர்தல் நேரத்தில் இருந்த அவரது உடல் நிலையை விட இன்று அவரது உடல்நிலை நிச்சயமாக அபிவிருத்தி அடைந்திருக்கிறது. நிலைமை இவ்வாறிருக்கையில் எம். ஜி. ஆர். பதவியில் நீடிக்கத்தானே வேண்டும்!

— எஸ். பழனியப்பன், திருநெல்வேலி—2.

புகைப்படம்: சுபா

# ஓடங்கள்



செந்தாமரை ஒரு கட்சித் தலைவர். வெ.ஆ.மூர்த்தி ஒரு கட்சித் தலைவர். பாம்பு × கீரி. இவருடைய மகளும், அவருடைய மகனும் காதலித்து வீட்டை விட்டு ஓடி, மனோரமாவிடம் அடைக்கலம் புகுந்து, அங்கே குழந்தை பெற்று, அங்கிருந்து புறப்பட்டு, சிறையிலிருந்து செந்தாமரையைக் கொல்வதற்காகவே தப்பித்து வந்திருக்கும் ராதாரவியின் உதவியுடன் வீட்டுக்குத் திரும்பி வந்து, சமரசத்தில் ஈடுபடப் பார்க்க, முயற்சி தோல்வியுற்று, செந்தாமரை ராதாரவியை டுமீல்! டுமீல்! ராதாரவி செந்தாமரையை டுமீல்! டுமீல்!

ஹையோ, ஹையோ! நாயகன் ஸ்கூல் பையன்! நாயகி ஸ்கூல் பெண்! இருவரும் மோதிக் கொண்டு முத்தமிடுகிறார்கள். என்ன ஓர் அழுத்தமான முத்தம் என்கிறீர்கள். வரவர சென்ஸார் குழுவினரின் குறட்டை சப்தம் பலமாகக் கேட்க ஆரம்பித்து விட்டது. இனிமேல் என்ன, கோ—எஜுகேஷன் பள்ளிகளில் எல்லாம் படிப்பாவது ஒன்றாவது!

நாயகி புதுமுகம் நவீனா. அமீர்ஜான் சாட்டையும் கையுமாக நின்றிருப்பார் போலிருக்கிறது, அவரிடமிருந்து நடிப்பை வரவழைக்க. பயந்து கொண்டே சிரிப்பு. பயந்து கொண்டே நடிப்பு. இவரை ஹீரோயினாகப் போட்டதற்கு புதுமுக ஹீரோ சஞ்சய்க்கே பெண் வேஷம் போட்டு, ஹீரோ ஹீரோயின் இருவரும் ஒருவரே என்று சொல்லியிருந்தால் புதுமை. ஹீரோவின் முகத்தில் பெண்மை அவ்வளவு வழிகிறது! ஏன் டைரக்டர் சார், கொஞ்சம் மீசையாவது ஒட்ட வைத்திருக்கக் கூடாது? மற்றபடி டூயட், டான்ஸ், சண்டை என்று எல்லாவிதத்திலும் ஹீரோவிற்கு பாஸ் மார்க்.

இட்லிக் கடை மனோரமாவை மறக்க முடியாது. அந்த நடுங்கும் குரல், தொள தொள ரவிக்கையுடன் வரிந்து கட்டிய புடைவையுடன் சண்டைக்குப் போகும் பாங்கு, அட, அடா..... அவர் பாடும் முதலிரவுப் பாட்டும் அப்படியே. ஜோரே ஜோர். அவரைப் போய் ரத்தம் சிந்த வைத்துச் சாகடித்திருக்கிறார்கள். அனாவசியமான பாத்திரக் கொலை. குற்றவாளி: டைரக்டர்! இரட்டை அர்த்த வசனங்கள் அங்கங்கே. (மாவாட்டும் சீன்) இளைஞர்களுக்குப் புத்திமதிப் பால் புகட்டும் வைரமுத்துவா இப்படி எழுதுவது? வெட்கம், வெட்கம்.

அந்தத் திமிரான கம்பீரம், எகத்தாள நடை, குதர்க்கப் பேச்சு எல்லாம் சந்தேகமின்றிச் செந்தாமரைக்கே சொந்தம். அவர் முன்னால் வெ.ஆ. மூர்த்தி சிங்கத்திற்கு முன்னால் எலி.

சந்தடி சாக்கில் இன்றைய அரசியல்வாதிகள் சிலரை மறைமுகமாகத் தாக்கி டைரக்டர் ஓர் ஆத்ம திருப்தியைத் தேடிக் கொண்டு விட்டார் போல. (உதாரணம் செந்தாமரையும் அந்தப் பெண் அரசியல்வாதியும் சந்திக்கும் இடம்.)

பாடல்களில் தாலாட்டுப் பாட்டு இனிமை. மனோரமா பாடும் முதலிரவுப் பாட்டு புதுமை. சம்பத் செல்வம் என்று அறிமுக இசையமைப்பாளர்கள்.

ராதாரவி முதலில் புரொஃபசர் — (தென்றல்) அப்புறம் கொலைகாரர் — (புயல்). புரொஃபசர் வேஷத்தில் பார்க்கும்போது ஒருமாதிரி இருக்கிறது.

இடைவேளைக்குப்பின் வெ.ஆ. மூர்த்தி என்ன ஆனார்? க்ளைமாக்ஸில் ஏன் அத்தனை போலீஸ்காரர்களும் துப்பாக்கியுடன் மார்ச்-பாஸ்ட் செய்கிறார்கள் என்பது போன்ற சில கேள்விகளை எல்லாம் மறந்துவிட்டால் ஓடங்களைக் கரை சேர்த்துவிடலாம்.

— ஜெயமன்மதன்

கடை மூடியிருந்தது. அண்ணாமலையின் கடை. மேலிருந்து கீழாக மூடுகிற கதவு. அதைத் தூக்கி முட்டுக்குச் சவுக்கை வைத்தால் திறந்தாயிற்று. வெளியே வாங்கிப் போக ஜனம் நின்றிருக்கிறது. நாலணா எண்ணெய். பத்து காசு காப்பித்தூள். ஒற்றைத்தக்காளி. ஆழாக்கு அரிசி. கஞ்சிக்குப் பதிலாக கொடுக்கப்பட்ட அஞ்சு காசுக்கு மிட்டாய். நண்டும், சிண்டுமாய் பரட்டை ஜனம். கடை திறக்கவில்லை. கதவுக்கடியில் வெளியே மூட்டை ஒன்று எப்போதும் இருக்கிறது. உப்பு மூட்டை. இந்தக் காலத்திலும் உப்பை யாரும் திருடுவதில்லை. சமயங்களில் அதன் மேல் நாய் ஒன்று சுருண்டிருக்கும். வாங்கிப் போக பொது ஜனம் நிற்கிறது. அண்ணாமலையின் பையன் சிட்டி ஊதுவத்தி கொளுத்தி, தராசுத் தட்டில் கற்பூரம் எரித்து போணி செய்தபின் கடை திறக்கும்.

எழுந்திருக்க நேரமாகி விட்டது. சிட்டி பல் துலக்கி விபூதி பூசியிருந்தான். அவன் தினமும் காலை இருட்டில் பித்தளைத் தூக்கும், நாய் பயமுமாய் வாடிக்கைகளுக்குப் பால் ஊற்றுகிறவன். பள்ளி நேரம் தவிர மற்ற நேரங்களில் கடையையும் பார்த்துக் கொள்கிறான். பொறுப்பு உணர்ந்த பிள்ளை. சுமாராக மார்க்கும் வாங்கி விடுகிறான்.

"எத்தினி பேரு நிக்கிறோம்? கடையத் தொறங்க. எம்மாந் நேரம் நிக்கிறது?"

"பாரேன் லேட்டு பண்றதை. கடைக்கார், சீக்கிரம் கடை தொற. நீ எப்போ கொடுத்து எப்போ ஆக்கிப் போடறது? நேட்டுக்கு லேட்டாயிடுச்சி. அது எந்திரிச்சா அப்படியே சோத்துக்கு உக்காந்துக்கிடும். ஆயிரம் ஜோலி கிடக்குது. கடையத் தொற."

"யோவ், கடையத் தொறய்யா."

"யாரது?" கதவைத் தூக்கி அண்ணாமலை எட்டிப் பார்த்தான். "அட நீதானா? கவர்னர்தான் வந்துட்டாராங்காட்டியும்னு நினைச்சேன். அதிசயமா துட்டு வெச்சிருக்கியா? அதான் குரலு பலக்க கிளம்புது. பத்து காசு வியாபாரம். ரெண்டு மாசமா பதினெட்டு ரூவா பாக்கி. யோவ், கீவ்னு குரலு கொடுக்கறே? டெய்லி இன்னேரத்துக்குத்தான் கடை தெறக்கும். காஜா பீடி இல்லே. நிக்கிறதுன்னா நில்லு. கஷ்டமாயிருந்தா போய்க்கினே இரு."

கதவைத்தூக்கி அண்ணாமலை இறங்கினான். சாய்த்து வைத்த சவுக்கில் பல்லி குதித்தது. உப்பு மூட்டை பின்னால் ஒளிந்து கொண்டது. வியாபாரம். காசுக்கேற்ற பலகாரம். பாட்டிலின் கீழ் எண்ணெய் வளையம். பொட்டலம் சணல் சுற்றித் தத்தி நின்றது. அண்ணாமலை சில்லறைக் குவியலை சந்தோஷமாய்ப் பார்த்துக் கொண்டான். சிறுதுளி பெரு வெள்ளம். ரசனைக்காரன். கடையின் உள்பக்கம் திறந்த கதவில் பின்பக்கம் இணைந்த வீடு. நேராக கட்டில் தெரிகிறது. விரிப்புடன் கூடிய தரமான மெத்தை. வாழ்க்கை வசதியாக இருக்கிறது. பள்ளிப் படிப்பு ஏரிக்கரையில் எருமை வாலில் போனதில் பெரிய இழப்பு இல்லை. இந்தப் புறநகரில் கடை போட்டு அது வளர வளர கூடவே வளர முடிகிறது.

"யப்போவ்" என்றான் சிட்டி.

"என்னடா?" என்றான் அண்ணாமலை.

"படம்தானேப்பா உன்னை இட்டுக்கினு போகச் சொல்றேன்."

"படமா? என்ன படம்?"

"எதுனாச்சும் ஒரு படம். மெட்ராஸ் தியேட்டர்லே இட்டுக்கினு போறேன்னு சொன்னியே."

"எப்போ?" என்றான் அண்ணாமலை.

"அய்யே சொன்னியே, மறந்திட்டியா?"

"அதுக்கு என்ன இப்போ?"

"இன்னிக்கிக் கூட்டிக்கினு போ."

"சர்த்தான். கம்முனு கிட."

"அய்யே.இட்டுக்கினுபோப்பா."

"தே" என்றான் அஞ்சலை."புள்ள கேக்குதில்லே?"

"எதுனாச்சும் இருக்கா உனக்கு?"

"இருந்தா குடேன். எந்நேரமும்



# மிரண்டவன்

வியாபாரம்னு கடையைக் கட்டிக்கினு அழுவறோம். என்னாத்துக்கு சம்பாதிக்கிறது சொல்லு. குடும்பமா எங்கியும் போயி நாளாச்சுது. புள்ள மெட்ராஸ் தியேட்டர்லே சில்லுனு படம் பார்க்கணும்னு ஆசைப்படுது. இட்டுக்கினு போனா என்னவாம்?"

அண்ணாமலை கட்டிலில் படுத்துக் கொண்டான். மின்விசிறி டேபிளில் திரும்பியது. கடையில் சிட்டி இருப்பது தெரிந்தது. அரைத்த சாம்பார் பொடியை நான்கணாப் பொட்டலங்களாய்க் கட்டிக் கொண்டிருந்தான். அவ்வப்போது வந்தவர்கள் கேட்டதை எடுத்துக் கொடுத்தான். சில்லறையை எண்ணிப் போட்டான். வத்திப் பெட்டி படம், பழைய ஃபிலிம் என்று அவன் அளவில் கடையை சிட்டி விஸ்தீரணம்

செய்திருக்கிறான். குனிந்த தலை நிமிராமல் பொட்டலம் மடித்து முடித்தான். ஒன்றே போல் அத்தனை பொட்டலங்களும். 'டேய்' என்றான் அண்ணாமலை. 'படத்துக்குக் கிளம்பு.'

அஞ்சலை பலகாரம் தயாரிக்கிறாள். வெளியில் கண்டதையும் விற்கிறார்கள். துட்டைக் கொடுத்து நோவு வாங்கினாற் போல்தான். அவள் சுத்தமாய் வீட்டிலேயே தயார் செய்யப் போகிறாள்.'. மூட்டையிலிருந்து உப்பைஎடுக்கிற போது இதை அவள் சொன்னாள்.

சிட்டி பேண்ட், சட்டை மடித்து மெத்தைக்கடியில் வைத்தான். அண்ணாமலை முகவாய் முட்களைக் கண்ணாடி முன் மழித்தான். இன்றைய நாள் வித்தியாசமாகி விட்டது. அஞ்சலை தனது ரோஸ் புடவையை எடுத்துக் கொண்டாள். 'கழுதைக்கு வேற புடவைங்களை கண்ணுக்குத் தெரியாது.' அண்ணாமலை அலுத்துக் கொண்டான். மாலையில் பால் கறப்பதற்கும், வாடிக்கை வீடுகளில் ஊற்றி வரவும் அவன் ஏற்பாடுகளை யோசிக்க வேண்டும்.

**பெ**ரிய தியேட்டர். கோடுகளுக்குள் கார்கள் அடங்கியிருந்தன. பிரும்மாண்ட சுவரின் கறுப்பு, நாள்பட்டு வெளுத்திருந்தது. பக்கங்களில் கண்ணாடி பிரதிபலித்தது. முதலாளி படத்தில் பல்ப் எரிந்தது. வழவழத்த தரை. வாங்கிக் கொள்கிற சோபாக்கள். படிக்கட்டில் இப்படி ஏறிச் சரிவாய் அப்படி இறங்குகிற மாடி. சிகரெட் பெயரெழுதி எச்சில் தொட்டி. ஸ்டில்கள். மத்தியானப் படம். மற்ற நேரத்துப் படம். ஞாயிற்றுக்கிழமை காலைப் படம். அடுத்த



வாரத்துப் படம், பார்க்கப் பார்க்க, பார்க்க இருந்தது. வெளியிலேயே சில்லென்று இருந்தது. கூரையில் எங்கேயோ பாட்டு கேட்கிறது. அப்புறம் ஒரு மிஷின் இருந்தது. மிஷினைச் சுற்றிக் கும்பல் இருந்தது. பல்ப் எரிந்து அணைகிற மிஷின். சக்கரம் சுழன்று நிற்கிறது. வேடிக்கை உடைகளில் பட்டினத்துப் பெண்கள். ஒருத்தி மிஷினில் ஏறி நிற்கிறாள். அவள் கவனிக்காத வகையில் அவள் நண்பன் ஒரு காலை மிஷினில் வைத்து அழுத்துகிறான். அவள் காசு போடுகிறாள். க்ர்ர்ரக். சிறிய டிக்கெட் போன்ற ஒன்று வருகிறது. இளம்பெண் கலவரமடைகிறாள். ஆயுளில் அவள் இவ்வளவு எடை இருந்ததில்லை. கால் வைத்து எடை ஏற்றியவன் காதருகில் கிண்டல் செய்தான். அவள் அவனை அடிக்க கைப்பையை ஓங்கினாள். அவன் பின்னுக்கு நகர்ந்து கொண்டான். அடி தவறியது. ஸாரி, பதறிச் சொன்னாள். அண்ணாமலை முனகி நகர்ந்து கொண்டான்.

"யப்போவ்?"

"என்னடா...?"

"அது என்ன?"

"எது?"

"அந்த மிஷினு?"

"எடை பாக்கறது!"

"எனக்குப் பார்க்கணும்."

"என்னத்தைப் பார்க்கப் போறே?"

"எடையும் அதிர்ஷ்டமும் அதுலே போட்டிருக்குது."

"அதிர்ஷ்டமா?"

"க்கும்பா. அதிர்ஷ்டமும் போட்டிருக்கும்."

"அதுக்கென்ன இப்போ?"

"காசு குடுப்பா. இருபத்தி அஞ்சு காசு."

"சும்மாயிரு. துட்டெல்லாம் கிடையாது."

"யப்போவ்" சிட்டி கெஞ்சினான்.

"தே" என்றாள் அஞ்சலை.

சிட்டி எடை மிஷினில் ஏறி நின்றான். சக்கரம் சுழன்றது. அது நிற்பதற்குள் சிட்டி காசைப்போட்டுவிட்டான். க்ர்ர்டக். அட்டை வரவில்லை. சப்தம் வந்தது. திடுக்கிட்டு சிட்டி இறங்கினான். பார்த்துக் கொண்டிருந்தவர்களுக்கெல்லாம் குபீரென்று சிரிப்பு வந்துவிட்டது.

"என்னடா?" அண்ணாமலை தலையில் தட்டினான்.

"அட்டை வரலே" சிட்டி தலையைத் தடவிக் கொண்டான்.

"சப்தம் கேக்க சொல்ல பயந்திட்டே. என்ன பயம்? மிஷினு துன்னுருமா உன்னை? அத்தினி பேரு பாக்கலே?"

குடும்பமாய்ச் சேர்ந்து புறப்பட்ட உற்சாகம் வடிந்துவிட்டது. அண்ணாமலை குடும்பம் தூண் ஓரமாய் நகர்ந்தது. அஞ்சலை சாய்ந்து உட்கார்ந்து கொண்டாள். பைக்குள்ளிருந்து பணியாரம் எடுத்தாள். 'எனக்கு வேண்டாம்' என்றான் சிட்டி. வருத்தமாய் இருந்தான். அட்டை வராததும் பின்னந் தலையில் அண்ணாமலை தட்டியதுமான வருத்தம். இதுபோன்ற இடங்களுக்கு அவன் வந்ததில்லை. எடை போட தராசு தவிர மிஷினைப் பார்த்ததில்லை. இது கக்கூஸ் இல்லாத நாடு. இங்கு கம்ப்யூட்டர் வந்து விட்டது. சிட்டி கெட்டிக்காரன். காற்றாடி சீசன் வரப் போகிறதென்று முன்கூட்டியே சொல்லிவிடுவான். சீசன் முடிந்து விட்டது என்று பம்பரம் வாங்கிப் போடுவதைத் தடுப்பான். ஆனால் மிஷின்களை அவன் பார்த்ததில்லை. க்ர்ர்டக், சப்தம் போடுகிற மிஷின்.

"துன்னுடா சிட்டி!"

"எனக்கு வேணாம்."

அண்ணாமலை நின்ற இடத்தில் கால் மாற்றிக் கொண்டான். அவனுக்கு வேறு விதமாய் வருத்தம். மகனின் அறியாமையில் வருத்தம்., பாவம், தலையில் அடி பலமாய் விழுந்திருக்க வேண்டும். சிட்டியின் முகம் வாடிவிட்டது. ஆசையாய் அவனுக்காகத் தான் புறப்பட்டு வந்தது!

"தே" என்றாள் அஞ்சலை.

"என்ன?" என்றான் அண்ணாமலை.

"புள்ள நிக்குது இல்லே? எதுனா தின்ன வாங்கிக் குடு."

"சர்த்தான்."

வேட்டியைத் தூக்கி அரை டிராயரிலிருந்து அண்ணாமலை காசு எடுத்தான். "காப்பி மூணு. டோக்கன் வாங்கிக்கினு வா."

"டோக்கனா?"

"தா அங்கிட்டுத் தராங்க பாரு!"

அண்ணாமலை டோக்கன் வாங்கிக் கொண்டான். உலகம் அவனுக்குத் தெரிவிக்காமல் மாறிக் கொண்டிருக்கிறது. மெஷின் ஒன்று காப்பி போடுகிறது. பிரும்மாண்டமாய்ப் பளபளக்கிற மெஷின். அண்ணாமலை இரண்டு காப்பிகளை மட்டும் சுமந்து திரும்பினான். க்ஷ் ஷெக்க்ஷ்ஷ். காப்பி மெஷின் சப்தம் போட்டது. அண்ணாமலை பயத்தில் திடுக்கிட்டான். சாஸரிலிருந்து கோப்பை நழுவித் தரையில் பீங்கான் உரக்க உடைந்தது.

"ஏம்பா! காலங்காத்தால அதைத் தூக்கி, இறக்கி விளையாடிக்கிட்டிருக்கிறதுக்குப் பதிலா பத்துக் குடம் தண்ணி மொண்டு கொடுத்து அம்மாவுக்குக் கூட மாட உதவி செய்யக் கூடாது...?.?"



# Big or small, plan it all, with KCUB !

Little drops of water....make the mighty ocean. At KCUB, we have saving schemes that start small-but yield timely results.

- Monthly Savings.
- Cash Certificates.
- Vamana Viswarupa Deposit.
- Fixed Deposit.



KCUB

**THE KUMBAKONAM CITY UNION BANK LTD.,**

Registered Office: Kumbakonam-612 001

KCUB—The Bank that's committed to growth — your growth.

MCS KCUB/217



பட்டுக்கோட்டை பிரபாகர்

# என்னைக் காணவில்லை

19

பரத் நாற்காலியை உடைத்து வெளிப்பட்டு நின்றதும், 'வெரிகுட்' என்று பாராட்டுக் குரல் கேட்டு ஒரு வினாடி பதறிப் போனான். கண்கள் கட்டப்பட்டிருந்த நிலையில் ''யாரு?'' என்றான்.

''வெரிகுட். யுவர் ஃபர்ஸ்ட் டச் வாஸ் வெரிகுட்'' என்று இசைப்பின்னணி இல்லாமல் 'ஹஸ்கி'யாக அந்தப் பெண்ணின் குரல் மட்டும் ஒலித்தது. பிறகு ஒவ்வொரு கருவியாக இணைந்து கொள்ள.....

டேப்ரிகார்டரில் இருந்து வந்த சங்கீதம் அது என்பதை உணர்ந்து கொள்ளவே சில வினாடிகள் ஆயிற்று. நிம்மதி மூச்சு விட்டான்.

பரத் தொடர்ந்து தனது சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டான். அடுத்து, கைக்கட்டை விடுவித்துக் கொள்ள வேண்டும்.

முன்புற பாண்ட் பாக்கெட்டில் சின்னக் கத்தி இருக்கிறது. முதலில் அதை வெளியில் எடுக்க வேண்டும். இரண்டு கைகளும் இணைத்துக் கட்டப் பட்டிருந்ததில் ஓர் எல்லைக்கு மேல் விரல்கள் பாக்கெட்டுக்குள் நுழைய முடியாமல் திணறின.

கத்தி அடியில் படுக்கைவாக்கில் கிடக்க.... பரத் தரையில் படுத்துக் கொண்டு, தேகப் பயிற்சி போல இரண்டு கால்களையும் இணைத்து, இடுப்பை உயர்த்தி, கால்களைச் செங்குத்தாகக் கொண்டு வந்து, புவியீர்ப்பு விசையின் தயவில் கத்தியைத் தடுமாற வைத்து, வெளியேற்றித் தரையில் விழ வைத்தான்.

பிறகு தடவி எடுத்து விரித்து, மண்டியிட்டு அமர்ந்து, இரண்டு முழங்கால்களுக்கும் இடையில் கத்தியின் கைப்பிடியை வைத்து இடுக்கிக் கொண்டு, கைக்கட்டின் கயிற்றைக் கத்தியின் முனையின் ஜாக்கிரதையாக உரசி.... உரசி...

நான்காவது நிமிடம், கைகள் விடுதலையாகி, பிளாஸ்திரியைப் பிய்த்து, கண் கட்டை அவிழ்த்து, இமைகளைக் கசக்கி, உதறி... கண்களைக் கடமைக்குக் கொண்டு வந்தான்.

துரிதமாக வாசல் கதவை அடைத்து உள்புறமாகத் தாளிட்டான்.

இந்த நிமிடம் தப்பிச் செல்வது சுலபம். ஆனால் இவன் யார், இது என்ன இடம், இவனுக்கு போன்

செய்தது யார், இவனுக்கு அசோக்கின் விலாசம் ஏன் முக்கியமாயுள்ளது என்கிற கேள்விகளுக்கான விடைகளை இங்கே கொஞ்சம் தேடிப் பார்த்தே ஆக வேண்டும்.

தகவல் தம்பி திரும்பி வரக் குறைந்தது இன்னும் முக்கால் மணியாவது ஆகும். அதற்குள்.... அதற்குள்.....

பரத் அந்த இடத்தை ஆராய்ந்தான். அது ஒரு சின்ன ஹால். ஒரே ஒரு அறைக்குச் செல்லும் வாசல். அங்கே மெல்லிசாய்ச் சலவைக்கான கோரிக்கையுடன் ஸ்க்ரீன். ஒரு சோபா. ரெக்சின் அரை டஜன் இடங்களில் கிழிந்து தேங்காய் நார் ஆஜர் என்றது. ஒரு முக்காலியின் மேல் டயலில் தன் எண்ணை வைத்துக் கொள்ளாத ஒரு கறுப்பு டெலிபோன். ரிசீவரில் ஹோல்டர். ஒற்றை டிராயருடன் ஒரு மர மேஜை. அதன்மேல் துணி விரிப்பு. பேனா, பென்சில், வாட்டர்பரீஸ் காம்பௌண்ட், அமிர்தாஞ்சனம், வி.வி.டி. தேங்காய் எண்ணெய், திருவிழாவில் வாங்கின புல்லாங்குழல், ரோத்மன்ஸ் சிகரெட் டப்பா என்று கலவையாகப் பொருள்கள் மத்தியில் டேப் ரிகார்டர்.

சுவர்களில் போட்டோக்களோ, போஸ்டர்களோ இல்லை. ஒரே ஒரு பல்லி — அருகாமைப் பூச்சியைக் குறி வைத்துக் கொண்டிருந்தது.

பரத் அந்த மேஜையை அணுகி, டிராயரை இழுத்துப் பார்த்தான். நான்கைந்து கேஸட்டுகள். கற்றையாகத் தமிழ் சினிமா பாட்டுப் புத்தகங்கள். தீப்பெட்டி, சுருட்டி வைக்கப் பட்ட பெல்ட், ரீஃபில் இல்லாத பால் பாய்ண்ட் பேனா.

மேஜைக்குக் கீழே ஃபேன் வாங்கின அட்டைப் பெட்டி குப்பைத் தொட்டியாக மாறியிருக்க... பரத் உட்கார்ந்து வாழைப் பழத் தோல்களுக்கு நடுவே கிளறி, கொசுக்களைப் பறக்கவிட்டு, சிடி பஸ் டிக்கெட், ஜவுளிக் கடை விளம்பர நோட்டீஸ், காயகல்பம் அட்டைக் கவர் எல்லாம் விலக்கித் தேட... அந்தச் சிறிய துண்டு அவனைக் கவர்ந்தது.

அந்தக் கிழிக்கப்பட்ட துண்டுக் காகிதத்தில்...

'...த்துவிட்டுக் கிழித்து விடு' என்று பேனா எழுத்துக்கள் இருந்தன.

அது ஓர் உயர்தரமான நீலநிற, மெல்லிய காகிதம்!

பரத் குப்பைப் பெட்டியைத் தலைகீழாகக் கவிழ்த்து, அதே நீலநிற காகிதமாகப் பொறுக்க ஆரம்பித்தான். தேடித் தேடி ஒரு நீல நிறத் துண்டு விடாமல் அத்தனையையும் பொறுக்கி ஒரு விளம்பரக் காகிதத்தில் பொட்டலமாக்கிப் பாண்ட்டுக்குள் திணித்து, பழையபடி குப்பைகளை அள்ளிப் போட்டு, அதனிடத்தில் வைத்தான்.

இந்தத் தகவல் தம்பி யார், என்ன என்று ஒரு விவரமும் கிடைக்கவில்லையே... டிராயரில் பார்த்த சினிமாப் பாட்டுப் புத்தகங்களில் எதிலாவது பெயரை எழுதி வைத்திருக்கிறானா என்று புரட்டிப் பார்த்தான். கிடைக்கவில்லை.

மூடிவிட்டு, அடுத்த அறைக்குள் சென்றான். ஒற்றை மரக்கட்டில் இருந்தது. சுவரில் வரிசையாக ஆணிகள் அடித்து பாண்ட்டுகள், சட்டைகள் தொங்கின. அவற்றின் பாக்கெட்டுகளில் கைவிட்டுத் தேடினான்.

நாளை மறுநாள் முதல் காட்சிக்குச் சாந்தி தியேட்டரில் ரிசர்வ் செய்யப்பட்ட இரண்டு டிக்கெட்டுகள் இருந்தன. கொஞ்சம் பணம், கொஞ்சம் சில்லறை, முத்து ட்ரை கிளீனர்சின் லாண்டரி பில்! அதில் ஈஸ்வரன், சென்னை என்று பெயர் எழுதி பாண்ட், சட்டை விவரங்கள் பில் செய்யப்பட்டிருக்க...

பரத் உள்ளறையை விட்டு, வெளியே வந்து, வாசல் கதவை நோக்கி நடந்தான். டேப்பில் இசை தொடர்ந்து கொண்டே இருந்தது.

இவன் கதவின் உள் தாழ்ப்பாளில் கைவைத்த அதேநேரம், கதவின் வெளித் தாழ்ப்பாள் திறக்கப்படும் ஓசையைக் கேட்டு அதிர்ந்தான்.

ஈஸ்வரன் வந்துவிட்டான்.

இப்போது என்ன செய்வது?

இவனிடம் நான் கட்டுக்களை அவிழ்த்துச் சுதந்திரமாக நிற்கும் இந்த நிலையில் சிக்கினால், ஆத்திரம் அதிகமாகி எதுவும் செய்வான். துப்பாக்கி வைத்திருக்கிறான். அசல் துப்பாக்கி. சாமர்த்தியமாகத் தப்புவதைத் தவிர வேறு யோசனையே இல்லை.

கதவின் பின்புறம் ஒளிந்து, அவன் உள்ளே நுழைந்ததும், கழுத்தில் ஒரே வெட்டு. பிறகு வெளியே ஓட்டம்.

இத்தனையையும் விநாடிகளில் தீர்மானித்து உள்தாழ்ப்பாளை ஓசையின்றி விலக்கிவிட்டு, இரண்டு கதவுகளில் ஒன்றின் பின்னால் ஒடுங்கி நின்று கொண்டான்...

கதவு திறக்கப்பட்டு...

அமைதியாய் இருந்தது.

யாரும் உள்ளே வரவில்லை.

பரத் அவன் வருகையை எதிர்பார்த்துப் பரபரப்பாகக் காத்திருக்க...

''பரத், கண்ணாமூச்சி விளையாட்டு வேணாம். கதவுக்குப் பின்னாலேர்ந்து வெளியே வந்துடு. உன்னை ஒளிச்சுக்கலாம். நிழலை ஒளிக்க முடியாது இல்லையா?''

கையில் ரிவால்வருடன் அவன் உள்ளே வந்து கதவைத் தாழிட்டான். ''நீ இவ்வளவு தூரம் சாமர்த்தியசாலின்னு எடை போடாதது என் தப்புதான். கையைத் தூக்குப்பா.''

இரண்டு கைகளையும் உயர்த்தினான் பரத்.

''அதே மாதிரி நானும் ஓரளவு சாமர்த்தியசாலின்னு நீ எடை போடாதது உன் தப்பு. நம்மைக் கொண்டு வந்த டாக்சி டிரைவர் என் தோஸ்த். நீ சொன்ன விலாசத்துக்குப் போய்ப் பார்த்து எனக்குப் போன் பண்ணச் சொல்லி அவனை அனுப்பிட்டேன். இப்ப தகவல் வந்திடும். நான் சும்மா டீ குடிக்கத் தான் போனேன். உனக்கும் ஒரு பயத்தை ஏற்படுத்த நினைச்சுதான் தனிமையிலே விட்டுட்டுப் போனேன். சர்க்கஸ்ல இருந்திருக்கே போலிருக்கே...''

பரத் அமைதியாக அவனையே பார்த்

தான்.

''சரி. சொல்லு. எதை எதை நோண்டினே? என்ன தெரிஞ்சுக்கிட்டே?''

''எதுவும் இல்லே. நான் கட்டுக்களிருந்து விடுபட்டு வெளியே வரவே இவ்வளவு நேரமாய்டுச்சி. எப்படித் தப்பிக்கலாம்னு யோசிக்கறப்போ, நீ வந்துட்டே.''

''அப்படியா? சரி, கிட்டே வா.''

கைகளை உயர்த்தியபடியே மெதுவாக அவனை நோக்கி அடி எடுத்து வைத்தான். மிக உறுதியாக அவன் பிடித்திருந்த துப்பாக்கியின் மீது பார்வை வைத்து நடந்தான்.

''பாக்கெட்லே என்ன என்ன இருக்குன்னு பார்த்துடலாமா பரத்?''

''தாராளமா'' என்று எச்சில் விழுங்கினான் பரத்.

அவன் ரிவால்வரை வலது கையிலிருந்து இடது கைக்கு மாற்றிக் கொண்டு, சட்டையின் பாக்கெட்டுக்குள் கைவிட்டு எடுத்துப் பணம், பெட்ரோல் பில் என்று பார்த்து விட்டு மறுபடி வைத்தான்.

''போதுமா? பார்த்தாச்சா?''

''பாண்ட் பாக்கெட்ல பார்க்கவேணுமா?''

''நானே சொல்லிடறேன். சின்னதா கத்தி வச்சிருக்கேன். எடுத்துத் தரவா?''

''நானே எடுத்துப் பார்த்துக்கறேன்.''

''வேணும். குறுகுறுன்னு இருக்கும்'' என்று பரத் பாண்ட் பாக்கெட்டுக்குள் இயல்பாகக் கையை விட்டுக் கத்தியை எடுத்துத் தந்தான்.

அதை வாங்கிக் கொண்டு, ''மறுபடி கையைத் தூக்கிக்கோ பரத். கத்தியைத் தவிர வேற என்ன இருக்குன்னு பார்ப்போம்'' என்றான்.

பரத் உள்ளுக்குள் பதறினான். கிழிந்த துண்டுகளைப் பொறுக்கிப் பொட்டலமாக வைத்திருப்பதை எடுத்து விடுவான். அந்தக் கிழிந்த கடிதத் துண்டுகளில் நிச்சயமாக எதுவாவது கிடைக்கும் உதவியாக. எந்தச் சந்தர்ப்பத்தையும் தராமல் மிகஎச்சரிக்கையாக இருக்கிறான் இவன்.

அவன் இவன் பாண்ட் பாக்கெட்டுக்குள் கை நுழைக்கப் போன சமயம்... போன் ஒலிக்க, ''வந்துட்டேன்'' என்று, துப்பாக்கியை பரத்தின் மார்புக்கு வைத்த குறியை மாற்றாமல் அப்படியே பின்புறமாக நடந்து சென்று ரிசீவரை எடுத்தான்.

''ஹலோ யாரு...? அப்படியா? நான் எதிர்





> ''ரசிகர்களின் வேண்டுகோளுக்கு இணங்க இப்போது ஒரு வங்காளப் பாடல் பாடுகிறோம்.....
>
> ''ஜன கண மன அதி.....''
>
> — பொடுசி

பார்த்தேன். சரி, நான் பார்த்துக்கறேன்.''

ரிசீவரை வைத்துவிட்டுப் பரத் நோக்கி வந்தவனின் முகம் இறுகிப் போயிருந்தது.

''பொறுமையா போன என்னைத் தூண்டிட்டே பரத். பொய் விலாசம் கொடுத்து என்னை நம்ப வைக்க முயற்சி பண்ணினே. ஒரு தடவை மன்னிக்கலாம் யாரையும். இதோ மன்னிச்சிட்டேன். இப்போ சொல்லு. அசோக் எங்கே இருக்கான்? எங்கே மறைச்சி வச்சிருக்கே அவனை?''

கேள்வி மாறினதில் பாண்ட் பாக்கெட்டில் சோதனை போடுவதை அவன் தற்காலிகமாக மறந்திருப்பதைப் பயன்படுத்தி, அதை அவன் நிரந்தரமாக மறக்க வைக்க.... புதுக் கோணத்தில் பேச நினைத்தான் பரத்.

''ஆல் ரைட் மிஸ்டர் ஈஸ்வரன். நாம யதார்த்தமா விரோதமில்லாம பேசலாமா?''

''என் பேர் எப்படித் தெரியும் உனக்கு?''

''அசோக் என் பொறுப்பிலே இருக்கிறது எப்படித் தெரியும் உனக்கு?''

''தெரிஞ்சுக்கிட்டேன்.''

''நானும் தெரிஞ்சுக்கிட்டேன்.''

''சரி. அசோக்கை நீதான் மறைச்சி வைச்சிருக்கேன்றதை ஒப்புக்கிறியா?''

''துப்பாக்கி முனையிலே... வேற வழி?''

''எங்கே வச்சிருக்கே?''

''உண்மையைச் சொல்விடறேன்.''

''கமான்.''

''இரு. இரு. அசோக் இருப்பிடம் உனக்கு எதுக்காகத் தெரிய வேண்டியிருக்கு?''

''அதை நீ தெரிஞ்சுக்க வேண்டியதில்லை.''

''சரி, அது வேணும். பேரமாவது பேசலாமா?''

''என்ன பேரம்?''

''அசோக் இருக்கிற இடத்தைச் சொன்னா, எனக்கு என்ன கிடைக்கும்?''

''உன் உயிர். என்ன பார்க்கிறே... இப்போ உனக்கு அது முக்கியமாப் படலையா? எவ்வளவு மதிப்பானது லாயர் பரத்தோட உயிர்... அதையே தர்றேன்னு சொல்றேன்... சொல்லு, அசோக் எங்கே இருக்கான்?''

இந்தக் கேள்வியின் போது ஈஸ்வரன் கையில் வைத்திருந்த துப்பாக்கியை மேலும், கீழுமாக அசைத்துக் கொண்டே பேச... பரத் தனது வலது கால் உயர்ந்தால் சரியாகத் துப்பாக்கியை அடைய முடிகிற தூரத்திற்கு மெதுவாக, இயல்பாகத் தன்னை நகர்த்திக் கொண்டு...

செயல்பட்டதில் ரிவால்வர் கையிலிருந்து எகிறிக் கீழே விழ... பரத் பாய்ந்து சுவிட்ச் போர்டை அடைந்து அணைத்து சுவிட்சுகளையும் அணைத்து.... இருள் பரப்பினான்.

ஈஸ்வரன் தரையில் பரபரப்பாகத் துப்பாக்கியைத் தேடுகையில்... பரத் வாசலை நோக்கி நடந்தான்.

''பரத், வாசல் கதவைத் திறக்காதே. திறந்தே, என் துப்பாக்கி இரக்கமில்லாம பேசும். எடுத்தாச்சு... ரிஸ்க் எடுக்காதே!''

ஈஸ்வரனின் குரலை அலட்சியப்படுத்தி பரத் தாழ்ப்பாளில் கை வைத்தபோது... அவன் தோளில் இறங்கியது அந்த வெட்டு. பரத் சுதாரிக்கும் முன்னர் முகத்தில் ஒரு குத்து...! திரும்ப... வயிற்றில் முழங்காலால் ஒரு தாக்குதல்!

தொடர்ந்த குத்துக்களில் பரத் தடுக்கவோ, எதிர்த்துத் தாக்கவோ சந்தர்ப்பமே இல்லை. காட்டுத்தனமாகச் செயல்பட்ட ஈஸ்வரன் விளக்கைப் போட்டபோது, பரத் உதடு கிழிந்து, முகத்தில் வீக்கத்துடன் தரையில் மடங்கி வயிற்றைப் பிடித்துக் கொண்டிருந்தான். கண்கள் செருகின.

''பரத், என்னைத் தப்பா எடை போட்டுட்டே. ஆயுதம் இல்லாமலேயே என்னால நாலு பேரைச் சமாளிக்க முடியும்'' என்று ஈஸ்வரன் சொன்னது பரத்திற்கு ஒரு கிலோ மீட்டருக்கு அந்தப் பக்கம் பேசுவதாய்க் கேட்டது. மயக்கம் அவனை முழுவதுமாக ஆட்கொள்வதற்கு முன், நாக்கின் வறட்சி தண்ணீர், தண்ணீர் என்று தவிக்க.... உதடுகள் அதை வார்த்தையாக்கின.

''தர்றேன்.''

ஈஸ்வரன் அறைக்குள் சென்று ஓர் உயரமான எவர்சில்வர் டம்ளரில் தண்ணீர் கொண்டு வந்து பரத்தின் முதுகுக்குக் கீழ் கைகொடுத்து எழுப்பி, சுவரோடு சாய்த்து அமர வைத்துத் தண்ணீர் புகட்டினான்.

''இப்ப சொல்றியா?''

''சொல்விடறேன்.''

''சொல்லு.''

பரத் சொல்லத் தொடங்குமுன் ஈஸ்வரனின் விரலில் இருந்த மோதிரம் அவன் கண்ணில் பட்டது. அந்த நவரத்தின மோதிரத்தின் பவளம், முத்து, வைரம், என்று எல்லா ரத்தினங்களும் இருக்க.... 'நீலக் கல்' இருக்க வேண்டிய இடத்தில் வெறும் பள்ளமாக இருந்தது!

(தொடரும்)

# 12

**ராஜாஜி வாழ்க்கை வரலாறு III**
**ராஜ்மோகன் காந்தி**



• பட்டாபி சீதாராமய்யா

இரண்டு பிரதேசங்களிலுமிருந்த சிறுபான்மையினர் தங்களைக் காப்பாற்றுமாறு இறைவனைப் பிரார்த்தித்தனர். தாங்கள் இடம் பெயர்ந்து வேறிடத்தில் குடிபுக நேருமோ என்று கவலைப்பட்டனர். அவர்கள் பயம் மெய்யாயிற்று. பல்லாயிரக் கணக்கானவர்கள் வீடு வாசலிழந்து மாற்றிடத்துக்குப் பயணப்பட்டார்கள். ஹிந்துக்கள், முஸ்லிம்கள், சீக்கியர்கள் ஆகிய மும்மதத்தினரும் ஏராள எண்ணிக்கையில் கொல்லப்பட்டார்கள். ஸி. ஆருடைய உள்ளத்தில் நாடு சுதந்திரம் பெற்ற மகிழ்ச்சியோடு வேதனையும் வெட்கமும் போட்டியிட்டன. அதே நேரத்தில் அவர் உணர்ச்சிகளை ஒதுக்கி வைக்க வேண்டியவரானார். ஆட்சிப் பிரச்னைகள் அவரது கவனத்தை முழுவதுமாகக் கவர்ந்தன.

லீக் அமைச்சர்கள் கிளம்பிச் சென்றார்கள். அதனால் அமைச்சரவையைப் புதிதாக மாற்றி அமைக்கத் தேவையிருந்தது. மேலும் பிரிட்டிஷ் கவர்னர்கள் பலர் கப்பலேறிக் கொண்டிருந்தனர். அவர்களுக்குப் பதில் வேறு நபர்களை நியமிக்க வேண்டியிருந்தது. யார் யார் எந்தெந்த இடத்தில் என்பதையெல்லாம் நேருவும் பட்டேலும்தான் பெரும்பாலும் கவனித்துக் கொண்டார்கள். சில சமயங்களில் காந்திஜியையும் அடிக்கடி ஸி. ஆரையும் கலந்தாலோசித்தார்கள். முக்கியமாக வங்கத்தைப் பற்றி பட்டேலும் நேருவும் மிகவும் கவலைப்பட்டார்கள். அங்கிருந்த கவர்னர் பர்ரோஸ் தாய் நாடு திரும்பிக் கொண்டிருந்தார். அவருக்குப் பதில் யாரை நியமிப்பது? நேரடி நடவடிக்கை என்ற பெயரில் முஸ்லிம் லீக் சமீபத்தில் தான் மேற்கொண்ட வன்முறையும் அதற்கு எதிர் நடவடிக்கை என்ற பெயரில் நிகழ்ந்த கலவரங்களும் இன்னமும் வங்கத்தில் பசுமையாகப் பலர் நினைவில் இருந்தன. மீண்டும் அங்கே இனக் கலவரங்கள் வெடிப்பதற்கான சாத்தியக் கூறுகள் மெய்யாலுமே இருந்தன. கவர்னர் பதவிக்குப் பல பெயர்கள் அடிபட்டு நிராகரிக்கப்பட்டன. பட்டேல், கே.எம். முன்ஷி பெயரைப் பிரேரேபித்தார். ஆனால் அவர் முஸ்லிம்கள் நலனில் அக்கறை இல்லாதவர் என்று பெயர் பெற்றிருந்தார். அதனால் அவர் இப்பதவிக்கு ஏற்றவராகமாட்டார் என்று மகாத்மா எண்ணினார். ஸி. ஆர்., கோபாலசாமி ஐயங்கார் பெயரைச் சொல்லி, பட்டேல், நேரு, மகாத்மா ஆகியமூவரது ஒப்புதலையும் பெற்றுவிட்டார். ஆனால் தமது குடும்பத்தில் உள்ள சில பிரச்னைகள் காரணமாகத் தம்மால் இந்தப் பொறுப்பை ஏற்க முடியாமல் இருப்பதாகக் கோபாலசாமி அய்யங்கார் கூறிவிட்டார்.

சற்றும் எதிர்பாராதவிதமாகப் பட்டேல் ஸி. ஆரிடம், "நீங்கள்தான் வங்கத்தைச் சமாளிக்க வேண்டும்; அங்கு நிலைமையைச் சமாளிக்கக் கூடிய ஒரு சிலரில் நீங்கள் ஒருவர்" என்றார். நேருவும் மகாத்மாவும் தமது யோசனைக்கு ஒப்புதல் அளித்துவிட்டதாகவும் தெரிவித்தார். தொடர்ந்து அவர், "(மேற்கு வங்கத்தின் முதல்வராகப் போகிற) புரஃபுல்ல கோஷ் உங்களைத்தான் விரும்பி எதிர்பார்க்கிறார்" என்றும் சொன்னார். ஸி. ஆருக்கு இது ஆச்சர்யமளிக்கவே செய்தது. அவருக்கு தில்லியை விட்டுச் செல்ல விருப்பமில்லை. சுதந்திர இந்தியாவில் கவர்னர்களுக்கு அதிகாரங்களே கிடையாது. ஓர் அரசியல் பார்வையாளர் விமர்சித்தது போல், ஒருவேளை ஸி. ஆரின் ஆற்றலும் சுதந்திரப் போக்கும் காரணமாகவே அவரை மூட்டை கட்டி அனுப்பிவிடுகிறார்களோ? ஸி. ஆர். இப்படி எண்ணினாரா என்பதைத் தெரிந்து கொள்ள வழி இல்லை. ஒருவேளை இப்படி அவர் எண்ணியிருந்தால்கூட, தாம் தில்லியிலேயே இருக்க விரும்புவதாக அவர் கூறியிருக்க முடியாது. இன்றுவரை அவர் 'எனக்கு இதைக் கொடு' என்று எந்தப் பதவிக்கும் ஆசைப்பட்டுக் கேட்டது கிடையாது; மந்திரி சபையில் சேர்த்துக் கொள்ளப்பட்டபின், 'இந்த இலாகாவைக் கொடு' என்றும் கேட்டதில்லை. இப்போது அம்மாதிரி ஒன்றைக் கூறித் தமது அப்பழுக்கற்ற நடத்தைக்கு அவர் களங்கம் ஏற்படுத்திக் கொள்ளப் போவதில்லை. வங்கத்தைப் பற்றி

**எரிமலையின் உச்சியில்...**

பட்டேல் ஜூலை 30ம் தேதி ஸி. ஆரிடம் பேசினார். ஸி. ஆர். அன்றே ஒப்புக் கொண்டார்.

அவர் பதவி ஏற்கப் போவதற்கு ஒரு வாரம் முன்பாகக் கல்கத்தாவில் மறுபடி கலவரங்கள் தலையெடுப்பதாகப் பத்திரிகைச் செய்திகள் கூறின. ஆகஸ்டு 7ம் தேதி பத்து பேர் மரணமடைந்தனர்; 85 பேருக்குக் காயம். கவர்னர் என்ற முறையில் நிர்வாக அதிகாரம் ஏதுமின்றிக் கலவரங்களை எப்படி தம்மால் தடுத்து நிறுத்த முடியும் என்று ஸி. ஆர். யோசிக்க ஆரம்பித்தார். தமது அச்சங்களை அவர் நேருவிடம் பகிர்ந்து கொள்ளவும் செய்தார். ''ராஜாஜி! என்ன இப்படி அசட்டுத்தனமாகப் பேசுகிறீர்கள்? இந்த நாட்டில் எந்தக் காரியமானாலும் ஏற்று, வெற்றி பெறக் கூடியவர் நீங்கள்'' என்று ஜவாஹர்லால் பதிலளித்தார்.

புதுதில்லியில் பிரிவுபசார நிகழ்ச்சியில் கலந்து கொண்ட பட்டாபி சீதாராமய்யா (அடுத்த ஆண்டு காங்கிரஸ் கட்சியின் அகில இந்தியத் தலைவராகப் போகிறவர்) சொன்னார்: ''நான் இன்று ஜோசியம் சொல்கிறேன், கேட்டுக் கொள்ளுங்கள்! நாடாளுமன்றம் இந்நாட்டுக்கு ஒரு குடியரசுத் தலைவரைத் தேர்ந்தெடுக்க வேண்டிய கட்டம் வரும் போது ஸி. ஆரையே தேர்ந்தெடுக்கும் என்பதில் எனக்குச் சிறிதும் சந்தேகமில்லை''. பட்டாபி மேலும் கூறினார்: ''ஸி. ஆர். 1940லிருந்து ஒரு தீர்வு காண முயற்சி மேற்கொண்டு வந்திருக்கிறார். அது கடைசியில் நடந்தேவிட்டது!'' ஸி. ஆர். தமது பதிலுரையில் கூறினார்:

''நான் என்ன பணி செய்யப் போகிறேன் என்று எனக்குத் தெரியவில்லை. என்னிடம் என்ன எதிர்பார்க்கப்படுகிறது என்பதும் புரியவில்லை. ஆனால் ஒன்று நிச்சயம். மேற்கு வங்கத்தில் அமைதியும் இசைவும் மீண்டும் நிலவ வழி காண வேண்டும். அம்மாகாணத்தில் வன்முறையைத் தடுத்து நிறுத்துவதில் நான் வெற்றி கண்டேனானால் அதற்கான பாராட்டுக்கள் முழுவதும் எனக்கு முன்பாகவே அங்கு போய்விட்டிருக்கிற மகாத்மா காந்தியையே சேர வேண்டும்.''

ஆகஸ்டு 14ம் தேதி விமான நிலையத்தில் ஸி. ஆரை வழியனுப்பி வைத்தவர்களுள் ஒருவர் பூனாவைச் சேர்ந்த என்.வி. காட்கில். இவர் புதிய அமைச்சரவையில் இடம் பெற்றிருந்தார். அவர் நினைவு கூர்ந்து சொல்கிறார்: ''ராஜாஜி என்னைத் தனியே அழைத்துப் போய், 'மந்திரி சபையில் உம்முடைய பிரதானமான பணி என்ன தெரியுமா? முக்கியமான இரு நபர்களும் கருத்து மாறுபாடுகள் காரணமாகப் பிரிந்து போய்விடாமல் கவனித்துக் கொள்வதுதான்'' என்றார்.''

இப்படி காட்கிலிடம் கூறிவிட்டுக் கைத்தடியை ஊன்றுகோலாகப் பயன்படுத்திக் கொண்டு ஸி. ஆர். விமானத்தை நோக்கி நடந்தார்.

வங்கத்தின் மிகப் பெரிய ஆசை சுதந்திரம் என்றால், அதன் மிகப் பெரிய அச்சம் பிரிவினையாக இருந்தது. ஆகஸ்டு 15ம் தேதி அந்த அச்சம், ஆசை ஆகிய இரண்டுமே நிஜமாயிற்று. சிறுபான்மையினர் பிரச்னையைத் தேசப் பிரிவினை தீர்த்து வைக்கவில்லை. மேற்குவங்கத்தின் ஜனத் தொகையில் கால்வாசிப் பேர் முஸ்லிம்கள். கிழக்கு வங்கத்தில் கால்வாசியோ அல்லது மூன்றில் ஒரு பகுதியினரோ ஹிந்துக்கள். கல்கத்தாவைக் குறித்து எல்லாருக்கும் ரொம்பக் கவலை ஏற்பட்டது. கிழக்கு வங்கத்திலிருந்து ஹிந்து அகதிகள் கல்கத்தாவில் குவிந்தனர். உள்ளூர் முஸ்லிம்களில் பலருக்கு கல்கத்தா இந்தியாவுடன் இணைந்திருப்பதை ஏற்றுக் கொள்ளவே முடியவில்லை. இம்மாதிரி ஒரு கலவை வெகு சுலபத்தில் தீப்பிடிக்கக் கூடியதாக இருந்ததில் வியப்பில்லை.

காங்கிரஸ்விசுவாசிகளும்,முஸ்லிம்களும் பிரிட்டிஷ் வர்த்தகர்களும் ஸி. ஆர். கவர்னராக நியமிக்கப்பட்டதை வரவேற்றார்கள். ஆனால் சந்தோஷப்படாத பலரும் கல்கத்தாவில் இருந்தார்கள். 'வங்கத்தின் தவப் புதல்வர்களான சித்தரஞ்சன் தாஸ், சுபாஷ் சந்திர போஸ் ஆகியவர்களை ஸி. ஆர். எதிர்த்தவராயிற்றே? பாகிஸ்தானை ஒப்புக் கொண்ட முதல் காங்கிரஸ் தலைவர் ஸி. ஆரே அல்லவா?' இந்தக் கேள்விகளைப் பகிரங்கமாக எழுப்பினார் சுபாஷ் சந்திரபோஸின் சகோதரர் சரத் சந்திரபோஸ். இடைக்கால அமைச்சரவையில் ஸி. ஆரின் சக மந்திரியாக விளங்கிய சரத்சந்திரர், இரண்டே மாதங்களில் முஸ்லிம் லீக் அங்கத்தினருக்கு இடம் அளிப்பதற்காக வெளியேற்றப்பட்டிருந்தார். அன்று முதல் அவர் காங்கிரஸிலிருந்து படிப்படியாக விலகிச் சென்று கொண்டிருந்தார். இப்போது நேருவுக்கும் பட்டேலுக்கும் ராஜாஜியின் நியமனத்தை எதிர்த்துக் கடிதம் எழுதியதுடன், 'ராஜாஜி வேண்டாம்' என்று வலியுறுத்த நடந்த பொதுக்கூட்டத்துக்குத் தலைமை வகித்தார். அத்துடன் நில்லாது, 'ராஜாஜி வேண்டாம்' என்பதற்கு ஓர் இயக்கத்தையே தொடங்கி வைத்தார்! 'வங்கமும் பஞ்சாபும் ராஜாஜி திட்டப்படிதான் துண்டாடப்பட்டிருக்கின்றன' என்று குற்றம் சாட்டியதுடன், 'புண்ணிலே வேல் பாய்ச்சுவதுபோல் வங்க மக்களின் மன உணர்வுகளை ராஜாஜி நியமனம் பாதிக்கிறது' என்றும் போஸ் வர்ணித்தார்.

இத்தகைய ஒரு சூழ்நிலையில் கல்கத்தாவில் விமானத்தில் வந்திறங்கினார் ராஜாஜி.

(தொடரும்)

தமிழாக்கம்: கி. ராஜேந்திரன்



என் டாக்டர் மகா கெட்டிக்காரர். கால் உடைந்துவிட்டது என்று அவரிடம் போனேன். ஒற்றைக் காலால் நடக்கக் கற்றுக் கொடுத்துவிட்டார்!



சிவபெருமானை எந்தெந்த மலர்களால் பூஜித்தால் என்னென்ன பலன்கள் கிடைக்கும்.

| விரும்பும் பலன் | எந்த மலரால் அர்ச்சிக்க வேண்டும் |
|---|---|
| 1. பெருஞ் செல்வம் விரும்புவோன் | தாமரை மலர், வில்வம், சதபத்திரம் சங்க புஷ்பம், ஆகியவற்றால் லட்சக்கணக்கில் பூஜித்தால் சந்தேகமில்லாமல் பெருஞ் செல்வத்தைப் பெறுவான் |
| 2. இராஜ போகத்தை விரும்புவோன். | பழுதில்லாத பத்து கோடி மலர்களால் பார்த்திவ லிங்கத்தைப் பூஜிக்க வேண்டும். அல்லது பத்து கோடி வில்வ தளத்தை கசுந்த சந்தனத்தில் தோய்த்துப் பூஜிக்க வேண்டும். இதற்கு தாமரை மலர்கள் அல்லது சங்க புஷ்பங்கள் பூஜிக்கத் தக்கவை. பிறகு தூபதீபன நைவேத்ய அர்கிய, ஆரார்திக பிரதக்ஷிணை, நமஸ்கார, க்ஷமாபண விஸர் ஜனத் முதலியவற்றைச் செய்தால் இஷ்ட போகமும் ராஜரீகமும் உலகநாயகரான சிவபெருமான் திருவருளால் கிடைக்கும். |
| 3. பிரதானித்துவத்தை விரும்புவோன் | ஐந்து கோடி மலர்களாலும் |
| 4. சிறையிலிருந்து நீங்க விரும்புவோன் | லக்ஷம் புஷ்பங்களாலும் |
| 5. நோய் நீங்க விரும்புவோன் | ஐம்பதாயிரம் மலர்களாலும் |
| 6. அழகான மங்கையை மணம் செய்ய விரும்புவோன் | இருபத்து ஐயாயிரம் மலர்களாலும் |
| 7. கல்வியில் விருப்பம் கொண்டவன் | பன்னிராயிரத்து ஐநூறு மலர்களாலும் பூஜிக்க வேண்டும் |
| 8. கீர்த்தியடைய வேண்டியவர்கள் | பதினாயிரம் மலர்களாலும் |
| 9. முக்தி வேண்டியவன் | ஐந்து கோடி மலர்களாலும் |
| 10. ஞானம் வேண்டியவன் | கோடி மலர்களாலும் அர்ச்சனை செய்ய வேண்டும் |
| 11. சிவபெருமான் பிரத்தியட்சமாக வேண்டியவன் | அரைக் கோடி மலர்களால் அர்ச்சித்து மிருத்யுஞ்சய மந்திரத்தை ஐந்து லக்ஷம் முறை உருஜபிக்க வேண்டும் |
| 12. தேகத் தூய்மையை விரும்புவோன் | லக்ஷ மலர்களால் அர்ச்சிக்க வேண்டும் |
| 13. ஜன்மாந்திர ஞானம் விரும்புவோன் | இரண்டு லக்ஷம் மலர்களால் அர்ச்சிக்க வேண்டும் |
| 14. கர்ம தாசனம் வேண்டுபவன் | மூன்று லக்ஷம் மலர்களால் அர்ச்சிக்க வேண்டும் |

| | |
|---|---|
| 15. ஸவ்பதை தரிசனம் வேண்டுபவன் | நான்கு லட்சம் மலர்களால் அர்ச்சிக்க வேண்டும் |
| 16. தீர்க்காயுளை விரும்புவோன் | லட்சம் அருகினாலும் |
| 17. புத்திரப்பேற்றை விரும்புவோன் | லட்சம் கருஊமத்தையாலும் |
| 18. புகழை விரும்புபவன் | லட்சம் அகத்திப் பூவினாலும் |
| 19. சித்தி முகத்தினை வேண்டியவன் | லட்சம் துளசியாலும் |
| 20. சத்துருஷ்யம் வேண்டியவன் | லட்சம் லட்சம் வெள்ளெருக்க மலர்களாலும் |
| 21. ரோக நீக்கம் விரும்பியவன் | மாதுளை மலர், உற்பல மலர், சப்பாத்தி மலர்களாலும், கரவீர மலர்களாலும் |
| 22. விஷ்ணுவின் அனுக்கிரகத்தை வேண்டுபவன் | அதஸிப் பூவினாலும் முக்திகாமி வன்னியினாலும் |
| 23. தானியசம்பத்தை வேண்டியவன் | மன்ல மல்லியாலும் |
| 24. வஸ்திர சம்பத்தை வேண்டியவன் | கோங்க மலராலும் |
| 25. மனநிர்மலத்தை வேண்டுபவன் | நிர்க்குண்டியாலும் பூஜிக்க வேண்டும் |

சிவப் பிரீதியான மலர்கள் கிடைக்காவிட்டால் இதர மலர்களால் பூஜிக்கலாம்

## எந்த மலர்களால் சிவபெருமானை பூஜிக்கக் கூடாது

சண்பகம், தாழை இவ்விரண்டு மலர்களால் சிவபெருமானை பூஜிக்கக் கூடாது

ஆதமா முனிவர் கூறினார்
சிவமஹாபுராணம்

# இறையருள் இயக்குனருக்குச் சோதனைகள்!



* டைரக்டர் கே. சங்கர்



* படப்பிடிப்பில் டைரக்டர் சங்கர்.

இறையருள் இயக்குனர் என வர்ணிக்கப்படும் சங்கர் தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், இந்தி, சிங்களம் ஆகிய ஆறு மொழிகளில் நூற்றுக்கணக்கான படங்களை இயக்கியவர். வருவான் வடிவேலன், நவக்கிரக நாயகி, தேவி தரிசனம், தாய் மூகாம்பிகை, சுப்ரபாதம், நம்பினோர் கெடுவதில்லை போன்ற பக்திப் படங்களுக்கு இவரே இயக்குனர்.

இப்போது ஒரே சமயத்தில் மூன்று தெய்வீகப் படங்களை இயக்கி வருகிறார். அவை: வேலுண்டு வினையில்லை, முப்பெருந்தேவியர், ஆயிரம் கண்ணுடையாள்.

ஒரு படப்பிடிப்பில் அவரைச் சந்தித்த போது சொன்னார்:

"நான் தெய்வீகப் படங்களை அதிகமாக இயக்குவதன் காரணம் மக்களுக்கு பக்தி இருந்தால் பயம் வரும். பயம் இருந்தால் குற்றங்கள் குறையும். உதாரணமாக சபரி மலைக்குப் போகிறவர்கள் 41 நாட்கள் விரதமிருக்கும்போது பக்தி பரிசுத்தப்படுகிறது. கடமை, கண்ணியம், கட்டுப்பாடு தானாக ஒரு மனிதனிடம் குடிகொள்ள இந்த விரதம் உதவி செய்யும்.

ஒரு சமூகக் கதையை அன்றாட நடப்புக்களை வைத்துப் படமாக்கிவிட முடியும்.

புராண, தெய்வீகப் படங்களை நினைத்தபடி எடுத்துவிட முடியாது. இதற்கு ஓரளவு ஆராய்ச்சியும், பெரியவர்களின் ஆசியும், வழிகாட்டலும் தேவை.

கடந்த இருபத்தைந்தாண்டுகளாக நானும் தொடர்ந்து சபரிமலைக்குப் போய் வருகிறேன். தவிர மூகாம்பிகை கோவிலுக்கும், குருவாயூருக்கும் செல்வதுண்டு. அடிக்கடி ஆசாரிய சுவாமிகளையும் சந்தித்து ஆசி பெறுவேன்.

இதையெல்லாம் ஏன் கூறுகிறேன் என்றால், நிஜவாழ்க்கையிலும் நான் கடவுள் பக்தி மிக்கவன். அதனால் பக்திப் படங்களை எடுக்கும் போது அவற்றைச் சிரத்தையுடன் எடுக்க விரும்புகிறேன்.

## வேலுண்டு வினையில்லை

முருக பக்தி பற்றிய படம் இது. குற்றாலம் அருகேயுள்ள பன்பொழில் குமாரசாமி மலையினை ஒருசமயம் சபரிமலை செல்லும் வழியில் தரிசித்தேன். அங்கே குடிகொண்டிருக்கும் முருகனை இப்படத்தில் காட்டுகிறேன். அந்தமானில் உள்ள வெற்றிமலை முருகன் கோவிலுக்கருகே சேஸிங் மற்றும் கிளைமாக்ஸ் சீன்களைப் படமாக்கப் போகிறேன். விஜயகாந்தும் அம்பிகாவும் முக்கிய வேடங்களில் நடிக்கிறார்கள்.

## முப்பெருந்தேவியர்

லட்சுமி, சரஸ்வதி, பார்வதி மூவரும் மானிடப் பிறவி எடுத்து வந்து பெண்ணினத்

துக்கே பெருமை சேர்க்கும் கதை. தாய்க் குலத்துக்கு ஏன் தனி மதிப்பு வழங்க வேண்டும் என்பதையும் படம் விளக்கும். கே. ஆர். விஜயா பார்வதியாகவும், சுஜாதா சரஸ்வதியாகவும், லட்சுமி லட்சுமியாகவும் இப்படத்தில் நடிக்கிறார்கள்.

### ஆயிரம் கண்ணுடையாள்

பத்மினியும், பேபி ஷாலினியும் முக்கிய வேடத்தில் நடிக்கும் படம். நாக தேவதை, தவறு செய்த ஒரு தந்தையைத் திருத்தி நல்வழிப்படுத்த அக்குடும்பத்தில் குழந்தையாகப் பிறந்து, பழியுணர்ச்சி இல்லாமல் அவரது தவறினை உணரச் செய்ய வைக்கும் கதை.''

**ச**மீபத்தில் தமது சஷ்டியப்த பூர்த்தியினை விமரிசையாகக் கொண்டாடிய கே. சங்கர் இன்னமும் சுறுசுறுப்பாக செட்டில் பணிபுரிவது பார்ப்பவர்களை வியக்க வைக்கும்.

''தெய்வ பக்தரான உங்களுக்கு நிஜ வாழ்க்கையில் ஏதேனும் சோதனைகள் ஏற்பட்டு இறையருளால் கஷ்டம் விலகியதுண்டா?'' என்று கேட்டோம். இரண்டு நிகழ்ச்சிகளை மட்டும் உதாரணத்துக்குச் சொன்னார் சங்கர்:

''ஒரு சமயம் சபரிமலையை நோக்கிக் கால்நடையாகச் சென்று கொண்டிருந்தேன். நாங்கள் இருநூறு பேர்கள் ஒரு குழுவாகச் சென்றோம். திடீரென்று எனது காலில் ஒரு கல் குத்திவிட்டது. குழுவில் வந்த ஒரு சாமி டாக்டர். அவர் நடுவழியில் எனக்கு ஆபரேஷன் செய்து கல்லை அகற்றிக் கட்டுப் போட்டார். இதற்குள் இருட்டிவிட்டது. என்னுடன் வந்தவர்கள் பயணத்தைத் தொடர்ந்தனர். நான் தனியாகத் தள்ளாடித் தள்ளாடி நடந்து வந்தேன்.

''மாலையில் என்னைக் கடந்து முன்னால் சென்ற சாமி ஒருவர் திரும்பி வந்து தைரியம் சொல்லி என்னைக் கைத்தாங்கலாகப் பற்றி விறுவிறுவென்று அழைத்துக் கொண்டு மலையேறினார். ஏன், எதற்காகத் திரும்பி வந்தார்? யார் அனுப்பினார்கள்? இன்று வரை இதற்கு விடை கிடையாது. அவர் நிச்சயம் தெய்வம் அனுப்பி வைத்தவராகவே இருக்க வேண்டும் என்று நான் நம்புகிறேன்.

''இருபதாண்டுகளுக்கு முன்பு திடீரென்று எனக்குத் தொழிலில் மந்தநிலை ஏற்பட்டுப் பணக்கஷ்டமும் வந்தது. அந்த மாத எலக்ட்ரிஸிடி பில் கட்டக்கூட வழியில்லை. இதுபற்றி எனது மனைவி நினைவுபடுத்திய போது, ''இந்தப் பூஜை அறையிலே விளக்கு எரியணும்னு என்னை ஆண்டவன் காப்பாற்றுவார். நீ கவலைப்படாதே'' என்றேன்.

''அன்றே எனக்கு முன்பின் பழக்கமில்லாத ஒரு பிரமுகர் என்னிடம் வந்து, தமது புதுப்படத்தை நான் இயக்க வேண்டுமென்று கோரியதுடன் பத்தாயிரம் ரூபாய் அட்வான்ஸையும் கொடுத்தார். அவரையே அப்பணத்தைப் பூஜை அறையில் வைக்கச் சொன்னேன்.

— மன்னை செளரிராஜன்



## புதுக் கவிதைப் போட்டி - 6

கல்கி 14.12.86 இதழில் இடம் பெறும் ஓவியர் உமாபதியின் அரசியல் கார்ட்டூன்களில் ஏதேனும் ஒன்றினை அடிப்படையாகக் கொண்டு ஒரு புதுக் கவிதையைச் சுருக்கமாக எழுதி அனுப்புங்கள்.



* பிளஸ்டு மற்றும் கல்லூரி மாணவர்களுக்கு மட்டுமே இந்தப் போட்டி.
* புதுக்கவிதையை எட்டு-பத்து வரிகளுக்குள் அடக்கி ஒரு போஸ்ட் கார்டின் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுதலாம்.
* கார்டின் மறுபக்கம் உங்கள் பள்ளி அல்லது கல்லூரி முத்திரையைப் பெற வேண்டும்.
* விலாசப் பகுதியில் புதுக்கவிதை — 6 என்று குறிப்பிட வேண்டும்.
* உங்கள் பெயரையும் விலாசத்தையும் தெளிவாக எழுதிக் கவிதைகள் 22.12.86க்குள் எங்களுக்குக் கிடைக்கும்படி அனுப்பி வையுங்கள்.

முதல் பரிசு: ரூ. 100/—
இரண்டாம் பரிசு: ரூ. 25/— தவிர ஆறு மாதங்களுக்குக் கல்கி இலவசம்.

மற்றும் பிரசுரமாகும் அனைத்துக் கவிதைகளுக்கும் சன்மானம் உண்டு.

ஓர் இந்தியக் குடும்பத்தின் உண்மைக் கதை:



• ராஜகோபாலன் குடும்பம்

# வாசகர்களின் நேசக்கரங்களில் ஒரு குடும்பம்!

பெரும்பாலான இந்தியக் குடும்பங்கள், எப்படியெல்லாம் வறுமையின் பிடியில் சிக்கிச் சிதைந்து தவித்துக் கொண்டிருக்கின்றன என்பதற்கு ஓர் உதாரணமாகத்தான், கடந்த 9.3.86 கல்கி இதழில், மதுரை — திருப்பரங்குன்றத்தில் வசிக்கும் ஓய்வு பெற்ற தமிழாசிரியரான ராஜகோபாலன் குடும்பத்தைப் பற்றி, 'ஓர் இந்தியக் குடும்பத்தின் உண்மைக் கதை' என்ற தலைப்பில் ஒரு நிஜமான உண்மைக் கதையை வெளியிட்டிருந்தோம்.

அதைப் படித்த — மனித நேயம் மிக்க கல்கி வாசகர்களில் பலர் மிகவும் உணர்ச்சி வசப்பட்டுப் பேரய் கடித மலைகளாக எழுதிக் குவித்திருந்தார்கள். இன்னும் சிலர் வறுமையில் வாடும் இந்தியக் குடும்பங்கள் அனைத்தின் துயர்களையும் துடைக்க முடியாது என்றாலும் இந்த ஒரு குடும்பத்தையாவது வாழ வைப்போமே என்ற நோக்கில் அந்தக் குடும்பத்திற்கு உதவுவதற்காக முகவரி கேட்டு வாங்கிக் கொண்டார்கள். வேறு பலர், டிராப்ட் மூலமாகவும் செக் மூலமாகவும், மணியார்டர் மூலமாகவும் ராஜகோபாலன் குடும்பத்துக்கு உதவப் பணம் அனுப்பினர்கள். ஏன், ஒருவர் கல்கி அலுவலகத்திற்கு நேரடியாகவே வந்து நம்மிடம் பணம் கொடுத்து அந்தக் குடும்பத்துக்கு உதவுமாறு கேட்டுக் கொண்டார்.

ப்ளஸ் டூ படிக்கும் மாணவர் ஒருவர், 'ரேவதி அக்காவின் மருத்துவச் செலவுக்காக என் பெற்றோருடைய அனுமதியுடன் எனது சேமிப்பை அனுப்ப வேண்டும். தயவு செய்து முகவரி கொடுங்கள்' என்று ராஜகோபாலனின் இரண்டாவது மகளுக்கு உதவ நமக்குக் கடிதம் எழுதிய போது உண்மையிலேயே பரவசப்பட்டுப் போனோம். பம்பாயைச் சேர்ந்த ஒரு பெண்மணி, ரேவதிக்கு உதவும்பொருட்டுத்தம்மிடமிருந்த மாத்திரைகளையெல்லாம் ஒரு பெரிய பார்சலில் அனுப்பி வைத்திருந்தார். அத்தனையையும் நாம் ராஜகோபாலனின் குடும்பத்திற்கு அனுப்பி வைத்திருந்தோம். அதன் பிறகு அந்தக் குடும்பத்தின் நிலை என்ன? தெரிந்து கொள்ளும் ஆர்வத்தில் இந்த ரீ—விசிட்டின் போது ராஜகோபாலனின்

வீட்டுக்குச் சென்றிருந்தோம்.

''சார், எங்கள் கதை கல்கியில் வெளியானதிலிருந்து எங்களுக்கு ஏராளமான கடிதங்கள் வந்தன. மணியார்டர்கள் வந்தன. சில கல்கி வாசகர்கள் நேரடியாகவே எங்கள் வீட்டுக்குப் புறப்பட்டு வந்திருந்தார்கள். அப்படி வந்திருந்த திருச்சி புனித இருதய மேல்நிலைப் பள்ளித் தமிழாசிரியரான கண்ணன் என்பவர் நானூற்று எழுபத்தொரு ரூபாய்க்கு அரிசியும் மற்ற மளிகைச் சாமான்களும் வாங்கித் தந்துவிட்டுச் சென்றார்.

''சென்னையைச் சேர்ந்த டி. ஆர். விஸ்வநாதன் என்ற வாசகர், பெண்களின் கல்யாணச் செலவுக்கு மட்டும் பயன்படுத்த வேண்டும் என்ற நிபந்தனையின் பேரில் மாதா மாதம் நூறு ரூபாய் அனுப்பிக் கொண்டிருக்கிறார். செகந்தராபாத்தைச் சேர்ந்த என். எஸ். மணியன் என்ற வாசகர் 'ரேவதியின் மருத்துவச் செலவு என்னவானாலும் பரவாயில்லை. நல்ல டாக்டரிடம் கொண்டு போய்க் காட்டுங்கள். செலவுகளை நான் ஏற்றுக் கொள்கிறேன்!' என்று அவரும் மாதா மாதம் பணம் அனுப்பிக் கொண்டிருக்கிறார். ரேவதிக்கும் இப்போது உடல்நிலை தேறி வருகிறது. நத்தம் கோவில்பட்டியிலுள்ள மதிமாறன் என்ற வாசகர் லக்ஷ்மி நாராயணிக்கும் சாந்திக்கும் ஆகும் டைப்ரைட்டிங் கட்டணத் தொகையை மாதா மாதம் அனுப்பிக் கொண்டிருக்கிறார்.

''கல்கியில் கட்டுரை வெளியான பிறகு, முன்பு கடன் வாங்கியிருந்த பேங்க்கில் மறுபடியும் ஆயிரம் ரூபாய் கடன் வழங்கினார்கள். அதைக் கொண்டு, முன்பு மூடிய டீக்கடையை மறுபடியும் நடத்திக் கொண்டிருக்கிறோம். கல்கி வாசகர்களின் உதவியால் குழந்தைகளெல்லாம் வயிறாரச் சாப்பிடுகிறார்கள். மூத்தவள் கிரிஜாவுக்குத்தான் இன்னமும் ஒரு நல்ல வரன் அமைய மாட்டேன் என்கிறது. அதுவும் விரைவில் கைகூடும் என்று நம்பிக்கையோடு இருக்கிறேன்...'' என்று மிகவும் உணர்ச்சிப் பெருக்குடனும் நன்றிப் பெருக்குடனும் கூறினார் ராஜகோபாலன்.

கண்களால் வீட்டைத் துழாவிய போது, முன்பிருந்த தகர டின்களுக்குப் பதிலாகச் சின்னதாய் ஒரு காட்ரேஜ் பீரோ இருந்தது. முன்பு நாம் பார்த்தபோது, அவர்கள் உடுத்தியிருந்த ஒவ்வொரு துணியிலுமிருந்த கிழிசல்கள் இப்போது இல்லை. முன்பு எல்லோருடைய கண்களிலும் குடியிருந்த ஒருவித ஏக்கமும் எதிர்பார்ப்பும் ஏமாற்றங்களும் போய் இப்போது ஒரு நம்பிக்கையும் கனவுகளும் குடியேறியிருக்கின்றன. இரண்டாவது மகள் ரேவதியின் உடல்நிலையிலும் முன்னேற்றம் தெரிந்தது. இத்தனையும் கல்கி வாசகர்களின் நேசக்கரங்களால் நிகழ்ந்தவை என்று நினைக்கும் போது இன்னமும் பெருமிதமாகத்தான் இருக்கிறது.

— ஆசிரியர் குழு

கல்கி டிசம்பர் 28

கம்ப்யூட்டர் சிறப்பிதழ்



கம்ப்யூட்டர்கள் பற்றி A to Z



# மங்கையின் படைப்பில் ஒரு மலர் வனம்!

தட்ப வெப்ப நிலையை மறந்து, காடு, வீடு என்ற பாகுபாடின்றி எல்லாப் பூக்களும் ஒரே இடத்தில் பூத்துக் குலுங்கினால் எப்படி இருக்கும்? கௌரி நாயக்கின் 'வாட்டர் கலர்' ஓவியக் கண்காட்சியைப் பார்த்தவர்களுக்கு இத்தகைய அபூர்வ நந்தவனத்தினுள் உலவி வந்த உணர்வே ஏற்படுகிறது.

கௌரியின் ஓவியங்களில் முதலில் நம்மைக் கவரும் தன்மைகள் அவற்றின் நளினமும் தத்ரூபமும்தான். மலர்களைத்தான் பிரதானமாகத் தீட்டியிருக்கிறார். அந்த மலர்களின் நிறத்தையும் வடிவத்தையும் உணர்த்துவதோடு அவற்றின் மலரனைய 'மென்மையை (மலருக்கு மலரைத்தான் உதாரணம் சொல்ல முடிகிறது) யும் நாம் உணர்ந்து ரசிக்கும் வண்ணம் ஓவியங்கள் அமைந்துள்ளன.

''இது எப்படிச் சாத்தியமாயிற்று?'' என்று கௌரியைக் கேட்ட போது, ''ஆயில் பெயின்டிங்கில் இந்தப் பரிமாணத்தைக் கொண்டுவரவே முடியாது'' என்று சொல்லி விட்டு, மேலும் விளக்கினார்: ''வாட்டர் கலர்கள் பயன்படுத்துவதால்தான் மலர்களுக்கே உரிய புத்துணர்ச்சியையும் நளினத்தையும் காண்பிக்க முடிகிறது. அதிலும் வெள்ளை, கறுப்பு ஆகிய இரண்டு நிறங்களிலும் 'ஸிங்க் ஆக்ஸைடு' என்ற ரசாயனக் கலப்பு அதிகமாயிருப்பதால் ஓவியங்களின் தன்மையே மாறிப் போகும். எனவே இந்த இரண்டு நிறங்களையும் பயன்படுத்தாமல் தண்ணீரின் அளவை மட்டுமே அதிகரித்தும் குறைத்தும் நிறங்களின் அடர்த்தியை வேறுபடுத்துகிறேன். இதனால் இயற்கை வடிவத்துக்கும் நிறத்துக்கும் வெகு அருகே அணுக முடிகிறது. ஒவ்வோர் ஓவியத்தையும் கூர்ந்து கவனித்தால் அது மெல்லிய சல்லாத் துணிபோல, அடியில் உள்ள காகிதத்தின் வெண்மை மீது படர்ந்திருப்பது தெரியும். காகிதத்தின் வெண்மையைக் கொண்டே வண்ணங்களின் அடர்த்தியைக் கூட்டவோ குறைக்கவோ வேண்டும். ஒரு முறை தூரிகையில் வர்ணம் தோய்த்துக் காகிதத்தில் வைத்து விட்டால், அதன் ஈரம் சரியான அளவு உலர்ந்ததுமே, அடுத்த வண்ணப் பூச்சினைத் தீட்டி விட வேண்டும். இந்தக் கணிப்புகளைச் சரியாகப் பழகிக் கொண்டு செயல்படுவது கஷ்டம். இதனால்தான் இந்த முறையை அதிகம் பேர் கையாள்வதில்லை.''

''நீங்கள் எப்படி இந்தக் கலைக்கு, குறிப்பாக இந்த முறைக்கு ஈர்க்கப்பட்டீர்கள்?'' என்று கேட்டபோது, அவர் தம் குடும்பப் பின்னணியையும் (பெற்றோர்கள் இருவருமே கலைஞர்கள்) தம்மை ஊக்குவித்த ஸ்டெல்லா மாரிஸ் கல்லூரி நுண்கலைத்துறைப் பேராசிரியர்களையும் நன்றியுடன் குறிப்பிட்டார்.

''ஏன் தனியே ஓர் ஓவியப் பயிற்சி நிலையம் ஆரம்பிக்கக் கூடாது?'' என்று கேட்டு முடிப்பதற்குள் கௌரி பதறிப் போனார். ''என்னை வளர்த்து, உருவாக்கிய ஸ்டெல்லாவில் பணியாற்றுவதையே பெருமையாக நினைக்கிறேன். கனவிலும் இங்கிருந்து வெளியேறுவது பற்றி என்னால் நினைக்க முடியாது! ஆனால் 'கலையை ரசிக்கும் கலை' பற்றி ஆராய்ச்சி செய்ய ஆஸ்திரேலியாவுக்குப் போக இருக்கிறேன். ஆஸ்திரேலியாவில் பெறும் அறிவையும் அனுபவங்களையும் ஸ்டெல்லாவில்தான் பயன்படுத்துவேன்.

''எனக்கும் இந்தக் கலைக்கும் இடையே எதையும் நெருங்க விடமாட்டேன். அதனால், கல்யாணம் செய்து கொள்ளப் போவதில்லை என்று முடிவு செய்து விட்டேன். என் குடும்பத்தாரும் இதைப் புரிந்து கொண்டு என்னை வற்புறுத்தாமலே இருக்கின்றனர்!'' என்று தீர்மானமாகச் சொன்னார் கௌரி.

— சீதா ரவி

புகைப்படம்: கே. வி. ஆனந்த்

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras - 600 032.

Assistant Editor: P.S. Mani

Editor: K. Rajendran

*Editorial Office:* 28, Fifth Street, Lake Area, Nungambakkam, Madras - 600 034. (Phone: 473389)

*Administrative Office:* Race Course Road, Guindy, Madras - 600 032 (Phones: 431543, 434157 Press: 434190)




# வரட் ரோஸ் டஸ்ட் டீ

## சிகப்பு ரோஜாவின் அழகில் ஆழ்ந்து மதிமயங்காதவர் உண்டோ...

## ஸ்டேன்ஸ் ரெட் ரோஸ் டஸ்ட் டீ

## ருசித்து மனம் பறிகொடுக்காதவர் உண்டோ?

ரோஜாவின் மணத்தை யாரால் மறக்கமுடியும்? ஸ்டேன்ஸ் ரெட் ரோஸ் டஸ்ட் டீயின் நறுமணமும் அதேபோல்தான்—நினைத்தாலே நாவூற வைப்பது.

அதன் சுவையோ, ம்ம்ம்... இயற்கையானது. முழு திருப்தி அளிப்பது. மீண்டும் மீண்டும் பருகத் தூண்டுவது.

இத்தனிச் சுவையையும் நறு மணத்தையும் அதிகமாகப் பெற லாம்—ஸ்டேன்ஸ் ரெட் ரோஸ் டஸ்ட் டீ அளிக்கும் அதிக கோப்பைகளிலிருந்து.

ஸ்டேன்ஸ் கம்பெனியாரின் 80 வருட அனுபவத்தின் விளைவான தரமான தயாரிப்பு...




M86.61 Tm.

**ஸ்டேன்ஸ் ரெட் ரோஸ் டஸ்ட் டீ.**
**இதன் உன்னதச் சுவை, ரோஜா அழகிற்கு இணை**

ஸ்டேன்ஸ் டீ & காபி லிமிடெட் த.பெ. எண் 3856 கோயம்பத்தூர்-641 018.

REGISTERED No. M. 4362
Registered as a Newspaper in Sri Lanka



